Mahalakshmi Suryanandan.

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

# ஸ்ரீ ரமண பாமாலை

Recd on
25 Aug. FRIDAY
வரலக்ஷ்மி
விரதம் Day.

இயற்றியவர்

**மஹாலக்ஷ்மி சூர்யாநந்தன்**


பதிப்பாளர்

**ஸ்ரீ ரமண கேந்திரம் - புதுடில்லி**

1995



*முதற் பதிப்பு : டிசம்பர் 1995*

**Sri Ramana Paamaalai** (Tamil)



*விலை : ரூ. 20/-*

| | |
|---|---|
| அட்டை ஓவியம், சித்திரங்கள் | : **பத்மவாஸன்** |
| பதிப்பாளர் | : **ரமண கேந்திரம்,** 8, இன்ஸ்டிடியூஷனல் ஏரியா, லோதி ரோடு, புதுடில்லி - 110 003. |
| அச்சுக்கோர்வை | : **ரிப்ளிக்கா,** சென்னை - 600 004. |
| அச்சிட்டோர் | : **கார்த்திக் ஆஃப்செட் பிரிண்டர்ஸ்,** சென்னை - 600 015. |

## சமர்ப்பணம்

காந்தீய மேதையும், கல்வியாளரும்,
சிந்தனைச் சிற்பியுமான என் பிரிய
தந்தை அமரர் பேராசிரியர் கே. சுவாமிநாதன்
அவர்களின் நினைவாகவும், ஆசிகள்
வழங்கிவரும் என் அன்பு அன்னை
திருமதி விசாலாட்சிக்கும்.

— மஹாலக்ஷ்மி சூர்யாநந்தன்





பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி

## குரு பக்தி

ஞான குருரமண நம்ப னருட்பதத்தே
ஞானவருட் பத்தி நழுவாதேல் - ஊனமில்லை
யானையாக் கீடமா வெந்தப் பிராணியாத்
தானியல நேர்கினுந் தான்.

**– ஸ்ரீ முருகனார்**

*ஸ்ரீரமண ஞானபோதம்: ஏழாம் பாகம்,*
*உபதேச விளக்கம் (முதற் பிரிவு)*
*பக்கம் 158, பாடல் - 1054*





# உள்ளுறை



## இசைப்பாக்கள்




ஓம்

நமச்சிவாய

வாழ்க

# அணிந்துரை

## தெய்வத் தரு வாழ்க!

பாரதத்தின் தந்தையெனப் பார்மதிக்கும் மாமனிதர்
சீர் நிறைந்த காந்தியினை தினமும் மனத்திருத்தி
போற்றிப் பணிந்திருந்த புண்ணியனார் சாமிநாதர்
ஆற்றல் தனையிந்த அகிலம் முழுதறியும்!
வாழும் இலக்கியங்கள் வள்ளல் அவர்பற்றி
நாளும் நமக்களித்த நல்மனிதர் சாமிநாதர்
நெஞ்சில் ஒருபுறத்தில் நேராளர் காந்திக்கு
மஞ்சத்தைத் தந்தாலும் மாசற்ற பக்தியினை
பகவான் ரமணரிடம் பரிமளிக்கச் செலுத்தியவர்
புகலே அவரென்று பொழுதும் வணங்கியவர்
அத்தகைய பேராளர் அருமைமிகு சாமிநாதர்
உத்தமனின் நல்லருளால் உளங்களிக்கப் பெற்றெடுத்த
மகள்தான் பெருமையொளிர் மகாலெட்சுமியாவார்.
பகவான் ரமணரிடம் பக்திமிகக் காட்டுபவர்!
தந்தை வழியறிந்து தான் பிறந்த மண்ணினையும்
பந்தபாசம் களைந்தெறிந்த பகவான் ரமணரையும்
எண்ணத்தில் தாங்கி இனிதாகப் பக்திசெய்து
கண்ணில் நீர்வழியக் கனிந்துருகி வணங்குபவர்!
காரியங்கள் அத்தனைக்கும் கைகொடுக்கும் நற்கணவர்
சூரியானந்தன் துணையவர்க்கு வாய்த்தவரம்!
தந்தை முனம் விதைத்த சத்தான ரமணவிதை
சிந்தை நிலத்திலொரு தெய்வத் தருவாகி
நெஞ்சினிக்கும் நல்லமைதி நிழலை விரிக்கிறது!
கொஞ்சு தமிழ்ப் பாடல்களைக் கொட்டிச் சிறக்கிறது!

பகவான் ரமணனவர் பாததா மரைகளின்கீழ்
சுகமாகப் பண்ணுதிர்க்கும் தூயதிருப் பாடல்களை
பக்திமிக மலரப் படைக்கும் மகா லட்சுமியை
எத்திசையும் பாராட்டும் என்பதிலோர் ஐயமில்லை.
அறிவாற்றல் கொப்புளிக்கும் அன்பு மகாலட்சுமியாள்
இறைவன் திருவருளால் என்றென்றும் நனி வாழ்க!

நாதன்தாள்
வாழ்க

*1.8.1995*
''முருகனடி''
சென்னை - *18.*

**– சௌந்தரா கைலாசம்**



# FOREWORD

This elegant book carries seventy-one lilting songs extolling Sri Ramana Maharshi which have been composed with single-minded devotion by Mrs. Mahalakshmi Suryanandan who is the eldest daughter of the great Gandhian Scholar, educationist and philosopher, the late Professor K. Swaminathan (1896-1994) who was himself an ardent devotee of the Maharshi and a rare exponent of his spiritual thought.

As a teenaged girl during the late forties, Mahalakshmi ('Maggie' to those near and dear) used to accompany her parents during their week-end visits to Sri Ramanasramam in Tiruvannamalai when the Maharshi was mortally present. Thus, she had had the blissful thrill of observing the great Seer at close range and mingling in the milieu of eternal goodness and grace of Sri Ramana.

Soon after her benevolent husband Sri P.R. Suryanandan retired from Central Services at Delhi, Providence brought the pious couple to settle down very near Ramanasramam a decade ago, enabling them to bask for ever in the spiritual presence of the Maharshi that permeates the Ashramam.

During the past, Smt. Mahalakshmi had been delighting herself as well as select gatherings in Madras, and later in Delhi, with her devotional songs and *bhajans* especially on Sri

Ramana Maharshi. She had also trained and led many like-minded women and children in group-singing at Ramana Kendras (Delhi and Madras), Sri Ramanasramam and other places. Smt. Mahalakshmi has also a firm grounding in Carnatic music, having been taught classical music by some well-known masters at an early age and after. Her familiarity with the repertoire of verses ranging from those of Saivite and Vaishnavite saints of yore, down to the lyrics of Mahakavi Subramania Bharati, as well as hymns composed by Sri Ramana Maharshi himself and by Sri Muruganar, combined with her musical training and intuitive imagination aided by a melodious voice to negotiate the nuances of varying tunes, and above all her impelling inspiration springing from a life-long devotion and dedication to Sri Ramana have resulted in the present string of precious songs in praise of the Maharshi in various moods.

This garland of meaningful and tuneful songs is bound to delight all music lovers and Ramana devotees.

A very valuable contribution indeed to the core of Ramana Music.

**- La. Su. Rengarajan**

August 15, 1995
Madras – 102.



# நன்றியுரை

ஆண்டவன் சந்நிதி பாட்டுவிக்கும்

கம்பன் வீட்டுக் கட்டுத்தறியுங் கவிபாடும்
கொம்பின் மிழற்றுங் குயிலுங் கிளியுங் குரு ரமண
நம்பன் னடியார் நாவே யன்றி யடி நாயும்
தெம்புற் றொளிர்ச்சச் சிற்பர ஞானத் திறம் பேசும்.

— ஸ்ரீ முருகனார்

ஸ்ரீ ரமணஞான போதம் : எட்டாம் பாகம்,
உபதேச விளக்கம் (இரண்டாம் பிரிவு)
பக்கம் 2, பாடல் - 5

''ஸ்ரீ ரமண பாமாலை''யில் அடங்கியுள்ள 71 பாடல்களும் ஸ்ரீ ரமணபகவானே என்னைப் பாட வைத்திருக்கிறாரே தவிர, என் திறமையால் ஒரு பாட்டுக்கூட பிரயாசைப்பட்டு என்னால் இயற்றப் படவில்லை. 1941-ம் ஆண்டு, என் தாயும், தந்தையும் பதினாறு வயதினளான என்னை அழைத்துச் செல்ல, திருவண்ணாமலை ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் பகவானை முதல்முதல் தரிசிக்கும் பேறு பெற்றேன். பிறகு 1950ம் ஆண்டு வரை பலமுறை என் பெற்றோருடன் திருவண்ணாமலையில் சில நாட்கள் தங்கி, மலைச் சாரலிலும், கோசாலையிலும், தியான மண்டபத்திலும், உணவு கூடத்திலும், ஆஸ்ரமத்தின் பல்வேறு சூழ் நிலைகளிலும் பகவானை தரிசிக்க நேர்ந்தது என் மாபெரும் பாக்யமாகும். அப்பொழுது நான் சென்னை யில் உயர்நிலை பள்ளியிலும், பின்னர் கல்லூரியிலும் மாணவியாக இருந்தேன். பிறகு முழுநேர சமூக சேவகியாக அரசாங்கப்பணியில் சேர்ந்துவிட்டதால், தொடர்ந்து நீண்ட காலம் பகவான் சந்நிதியிலேயே இருக்கக்கூடிய வாய்ப்பில்லாமல் போனது எனக்கு ஒரு பெரும் குறையே. அந்தக் குறையை நீக்கத்தானோ, ஏனோ, எனது கணவர் உத்தியோகத்திலிருந்து

ஓய்வுபெற்ற பிறகு, எங்கள் சங்கற்பமொன்று மில்லாமலேயே, எங்களுக்கு திருவண்ணாமலையில், ஆஸ்ரமத்திற்கு அருகிலேயே வசிக்கும் பேறு கிட்டியதும், அவன் அருள் தான். இதற்குப்பிறகுதான், பகவானைப்பற்றிய நினைப்புகள் என்னை ஸதா உந்தித்தள்ள, இப்புத்தகத்திலுள்ள எல்லாப் பாடல் களையும் ஒன்றும் தெரியாத என்னை பகவானே எழுத வைத்துவிட்டது ஒரு விந்தையே. முதல் எட்டுப் பாட்டுகள் எழுதியதும், 1992-ம் ஆண்டு என் தந்தையாரிடம் காண்பித்தேன். அவர் அந் நாட்களில் முதுமையினால் உடற்சோர்வுற்றிருந்தார். யாருடனும் அதிகம் பேசாது, மௌனமே அனுசரித்து வந்தார்; எப்பொழுதும் பகவானை தியானிப்பதிலேயே ஆழ்ந்திருந்தார். அவர் கையில் நான் கொடுத்த பாட்டுகளை மிகவும் ஆர்வமாகப் படித்துப் பார்த்துவிட்டு, ''அடேயப்பா! நீயா எழுதியிருக்கே? ஊம், ஊம்; எழுது, எழுது,'' என்று சிரித்தமுகத்துடன் என்னிடம் அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிட்டார். பிறகு என் மற்ற பாட்டுகளை அவரிடம் காண்பிக்க முடியாமலேயே போய்விட்டது.

பிறகு 1995-ம் ஆண்டு மார்ச்சு மாதம் சற்றும் எதிர்பாராமல் நான் நோய்வாய்ப்பட்டு ஐந்து மாதங்கள் ரணசிகிட்சை மற்றும் பல்வேறு கடும் சிகிச்சைகளுக்கு ஆளாக நேர்ந்து விட்டது. அப்பொழுதெல்லாம் படுக்கையில் படுத்தவாறே எனது சக்தியைமீறி எழுதிய இருபது பாடல்கள் பகவானே என்னை எழுதவைத்து, என்வேதனையையும், வாதனையையும் கணிசமாய் குறைத்து, எனக்கு தைரியத்தையும், சகிப்புத் தன்மை யையும், உற்சாகத்தையும், மன நிறைவையும் அருளினார் என்றே கொள்கிறேன். இப்போது உடல் நலம் சற்றே தேறிவரும் சமயம் ஸ்ரீ ரமண பகவானுக்கு எனது நன்றிக்கடனாக, அவர் அருளால் நான் இயற்றிய

பாக்களை அவருக்கே மாலையாக அணிவிக்கத் துணிந்தேன். அவர் அருளினாலேயே, அனைவரும் எனக்கு உதவி செய்ய முன்வந்து, இன்று ஒரு புத்தக ரூபமாக இப்பாமாலை பதிக்கப்பெற்று அவர் பாதாரவிந்தங்களில் அர்ப்பணிக்கப்படுகிறது.

முதலில், ''தெய்வத் தருவாழ்க'' என்ற தலைப்பில் தெள்ளிய கவிதை வடிவில் சிறப்புப்பாயிரம் வழங்கி, ஒரு தகுதியுமில்லா என்னை ஒரு பக்தை எனும் உயர்நிலையில் வைத்து, வாழ்த்தி, இப்புத்தகத்திற்கே ஒரு தனி மதிப்பைச்சேர்ப்பித்ததற்கு, பிரபல தமிழ்க் கவிஞரும், சிறந்த தெய்வ பக்தையுமான திருமதி செளந்தரா கைலாசம் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ ரமண பகவானைப்பற்றிய ஆங்கில நூல்கள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துள்ள எழுத்தாளர் திரு. லா.சு. ரங்கராஜன், இப்பாமாலையிலுள்ள அனைத்துப் பாடல்களின் கையெழுத்துப் பிரதிகளையும், அச்சுப்பார்வைத் தாள்களையும் சரிபார்த்து, மேலும் பல ஆலோசனைகளையும் கொடுத்துதவியதுடன், ஆங்கிலத்தில் ஒரு அருமையான முன்னுரையும் எழுதியுள்ளார். அவருக்கு என் ஆழ்ந்த நன்றி உரித்தாகும்.

இப்பாடல்களின் கைப்பிரதியை கவனமாகப் படித்து, பொருத்தமான சில திருத்தங்கள் செய்துதவியதற்கு, அண்ணாமலை வாசியும், ரமண பக்தரும், தமிழ் வல்லுனருமான திரு. மா. கோவிந்தராஜனுக்கு என் உளங் கனிந்த நன்றியைச் செலுத்துகிறேன்.

மிக அழகாகவும், மிகுந்த பக்தி சிரத்தையுடனும், பாடல்களுக்குத்தகுந்த சித்திரங்கள் வரைந்துள்ள இளம்

ஓவியர் திரு. பத்மவாஸன் அவர்களுக்கும் என் மனமுவந்த நன்றி.

மிக நேர்த்தியாய் குறித்த காலத்திற்குள் அச்சிட்டு உதவிய ''கார்த்திக் பிரஸ்'' திரு T.V. வெங்கடராமன் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

இப்புத்தகத்தை வெளியிட ஆர்வமுடன், உடனடியாக ஒப்புக்கொண்ட தில்லி ரமணகேந்திர நிர்வாகக்குழுவினர்க்கு என் மகிழ்ச்சியான நன்றியை வெளியிட விழைகிறேன்.

இப்புத்தகத்தில் பதிவாயுள்ள புகைப்படங்களைத் தந்துதவியதற்கு ஸ்ரீ ரமணாஸ்ரம நிர்வாகக்குழு தலைவர் திரு. V.S. ரமணன் அவர்களுக்கு எனது மனம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த சந்தர்ப்பத்தில், எனக்கு இளம் பிராயத்தில் கர்நாடக சங்கீதத்தில் பயிற்சி அளித்த அமரர் மணக்கால் ஸ்ரீ சிவராஜய்யரையும், இப்பொழுது பிரபல கதா காலக்ஷேப பாகவதராக விளங்கும் மதிப்புக்குரிய மன்னார்குடி ஸ்ரீ சாம்பசிவ ஐயரையும், மற்றும் சமீபத்தில், தில்லி ரமணகேந்திரத்தில், ஸ்ரீ முருகனாரின் ஸ்ரீ ரமண சந்நிதி முறையிலிருந்து சில பாக்களை இசைக்கக் கற்பித்த திரு. தண்டபாணி ஓதுவாரையும், ஸ்ரீ ரமணரின் மேல் இயற்றிய சொந்த சாகித்யங்கள் சிலவற்றை எனக்கு மிகுந்த விருப்பத்துடன் புகட்டிப் பாடவைத்த அமரர் C.N. சாஸ்திரி (முந்நாள் நிலைய வித்வான், தார்வார் வானொலி நிலையம்) அவர்களையும் நினைவுகூறி வணங்குகிறேன்.

மிக, மிக முக்கியமாக, அமரர்களாகிவிட்ட பழம்பெரும் ரமண பக்தர்களான ஸ்ரீ முருகனார்

சுவாமிகளும், திரு தேவராஜ முதலியாரும், திருமதி சூரி நாகம்மாளும், ஸ்ரீ விஸ்வநாத சுவாமிகளும், ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளும், 1950-ம் ஆண்டிலிருந்தே ஸ்ரீ ரமண பகவான் பாடல்களை ஸ்ரீ ரமணாஸ்ரமத்திலும், சென்னை ரமண பக்த சபையிலும் நான் பாடிவர மிகவும் உற்சாக மூட்டியது நான் செய்த பெரும் புண்யமாகும். நெடு நாளைய ரமணாஸ்ரமவாசியும், பகவான் ரமணரின் வடமொழி, தமிழ் நூல்களை நன்கு கற்றறிந்தவருமான ஸ்ரீ K. நடேசன் அவர்கள் தான் முதல்முதல் என்னை ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் முன்னிலையிலேயே, அவரியற்றிய ஸ்ரீ ரமண சந்நிதி முறையிலுள்ள பாடல்களைப் பாட வைத்து, ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் ஆசியை நான் பலமுறை பெற உதவினார். இவர்கள் அனைவரையும் நான் மிகப்பணிவுடன் தலை வணங்குகிறேன்.

முடிவாக, எனது இளைய சகோதரிகள், திருமதி (Dr.) சாந்தா ராமசந்திரன், திருமதி (Dr.) தர்மா சாட்டர்ஜீ இருவருக்கும் எனது கணவர் திரு P.R. சூர்யாநந்தன் அவர்களுக்கும், இப் பாடல்களை நான் பாடக்கேட்டு, இவைகளை அச்சிட வேண்டுமென எனைத் தூண்டி உற்சாகப்படுத்தி, சகல உதவிகளும் அளித்ததற்கு என் நன்றியை நவிலுதல் என் தலையாய கடமையாகும்.

''ஸ்ரீ ரமண பாமாலை'' புத்தகத்திலுள்ள நல்லனயாவும் ஸ்ரீ ரமண பகவானின் அருட் பிரசாதமே; எனினும் குறைபாடுகள் காண்கின், அவை என்னை மட்டுமே சார்ந்தவையாகும் எனக்கூறி, அவன் அருளாலே அவன் தாள்களைப் பணிகிறேன்.

*1-9-1995*
ஸ்ரீ ரமணர் அருணை
விஜயதினம்

**மஹாலக்ஷ்மி சூர்யாநந்தன்**
''அருணாசல சிவா''
ஸ்ரீ ரமண நகர்,
திருவண்ணாமலை - *606 603*

# பதிப்புரை

அருணை ரமண அகத்தூண்டுதலின் அகமாக பாரதத்தலைநகரில் ரமண கேந்திரத்தை உருவாக்கிய, நம் அனைவரது பெரும்மதிப்புக்குரிய அமரர் பேராசிரியர் கே. சுவாமிநாதன் அவர்களின் மூத்த மகளான திருமதி மஹாலக்ஷ்மி சூர்யாநந்தன் பற்றிய அறிமுகம் இக் கேந்திர அன்பர்களுக்குத் தேவையில்லைதான். பேராசிரியரின் டில்லி வாழ் காலத்தின் பிற்பெரும் பகுதியில் சூர்யாநந்தன் தம்பதியினர் அவருக்கு உறுதுணையாய் கூடவே இருந்து அவரைப் போற்றிப் பேணி, ஸ்ரீ ரமண கேந்திரப் பணிகளிலும் பெரும் பங்கேற்றுவந்தவர்கள். வாராந்திர சத்சங்கங்களிலும் மற்ற நிகழ்ச்சிகளிலும் திருமதி மஹாலக்ஷ்மியின் செவிக்கினிய பக்தி கீதங்கள், கோஷ்டிகானங்கள் ஆண்டாண்டுகள் தொடர்ந்து ஒலித்துவந்துள்ளன.

சென்ற பத்து ஆண்டுகளாக திருவண்ணாமலை ஸ்ரீ ரமணாசிரமத்தின் அருகிலேயே கனிவுக் கணவருடன் ரமணானுபவத்தில் திளைந்து வாழ்க்கை நடத்திவரும் திருமதி மஹாலக்ஷ்மி, தமது தேர்ந்த சங்கீத ஞானத்தில் பகவானருட்செறிந்து உதித்த 71 ரமண நாமாவளிப் பாடல்களை ராக-தாளக் கட்டமைத்து இயற்றி, அவற்றைப் பிறர்க்கும் பகிர்ந்தளிக்கும் நன்னோக்குடன் தம் பொருட்செலவில் இச்சிறு நூலாக அச்சிட்டு வழங்கியுள்ளார்.

சொல்நயம், இசை நயம் மிக்க இக்கீதாஞ்சலியாகிய ஸ்ரீ ரமண பாமாலையை வெளியிடுவதில் தில்லி ரமணகேந்திரம் பெருமைப்படுகிறது.

புதுடில்லி
*20.10.1995*

ரமணகேந்திரம்
புதுடில்லி

11/4

# 1. அர்ப்பணம்

ராகம் : கௌளை　　　　　　　　　　தாளம் : ஆதி

உண்ணாமுலை அம்மைக்கு உன்னில், ஒரு கூறு
உவந்து ஈந்தவனே
அண்ணாமலை அப்பனே உலகுய்ய அரும் பெரும் இரு
மைந்தரை தந்தவனே
கண்கள் மூன்றுடையவனே, எம் மூவினையும்
மாய்த்தருள்பவனே
மண்விண்ணில் அரியும் நான்(கு) முகனும் அடிமுடி
காணா அங்கி உருவானவனே
கண்டும் காணா பொருளனைத்துக்கும் முதல்வோனே–
முதற்கண் உந்தனுக்கே
வணக்கம் பல செலுத்தி அர்ப்பணிக்கிறேன் பணிவுடனே
ஸ்ரீ ரமண பாமாலை



# 2. கணபதி காப்பு

ராகம் : ஆரபி                    தாளம் : திரிபுடை (கண்ட ஜாதி)

ஐந்து கரத்தனே, ஆனை முகத்தனே,
ஆறுமுக வேலனுக்கு அண்ணனே
பந்தமொழிய ஏழேழ் பிறவிக்கும் உந்தன்
அருள் வேண்டி பூங்கழல் தொழுதேத்தி
எண் திசைவானோரும் நவகோள்களும் நல்லாசி
நல்கிடவே வணங்கி
கணபதியே, விக்னவிநாயகனே, ஏதும் அறியா
இவ்வேழை நெஞ்சுருகி
கண்ணீரில் பன்னீரென கழுவிப் புனைந்த பாமாலையை
நவரத்ன மாலையெனவே
உந்தன் இளையோன் கந்தரமணனுக்கு
அணிவிப்பாய் ஐயா – கருணை புரிந்தே





# 3. புஷ்பாஞ்சலி

ராகம் : நாட்டை　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

### பல்லவி

*ஜய ஜய ரமணேச ஹரே - ஜய ஜயா*
*ஜய ஜய ரமணேச ஹரே - ஜய விஜய ஜய ஜயா*

### அனுபல்லவி

*மந்தஹாஸ ரமணா எந்தன் ஹ்ருதயத் தாமரை*
*உந்தாள் அர்ப்பித்து* ***புஷ்பாஞ்சலி ஸமர்ப்பணம்*** *(2)*

### சரணங்கள்

*1) பரம புருஷ பரம பவித்ர பரமஸ்ரேஷ்டனுக்கு*
*பரமஹம்ஸ பரமாத்ம ரமணனுக்கு* ***(புஷ்பாஞ்சலி)***

*2) பதிதபாவன புண்ய ஸ்லோகனுக்கு - பரி*
*பூர்ண புருஷோத்தம ரமணனுக்கு -* ***(புஷ்பாஞ்சலி)***

*3) பரம ஞானி பரசிவரமணனுக்கு*
*பராத்பர பரமேஸ்வர ஸ்வரூபனுக்கு* ***(புஷ்பாஞ்சலி)***

*4) பூர்ண சந்திர பொன்மேனி பத்மாஸன ரமணனுக்கு*
*பொற்சுழியற் பூமிநாத ஸஹாயாம்பா பிரஸாதனுக்கு*
***(புஷ்பாஞ்சலி)***

*5) பார் புகழ் திரு அருணகிரி ரமணேசனுக்கு*
*பேரொளியாய் அருணை ஜோதியில் கலந்த*
*பரஞ்ஜோதியனுக்கு*
***(புஷ்பாஞ்சலி)***

(ஜோதி, ஜோதி, ஆத்ம ஜோதி) 2
(ஜோதி, ஜோதி, ஜகத் ஜோதி) 2
(ஜோதி, ஜோதி, பரஞ் ஜோதியனுக்கு
**புஷ்பாஞ்சலி ஸமர்ப்பணம்)**







# 4. ரமணா வருவாய்

ராகம் : பூபாளம் தாளம் : ஆதி

பல்லவி

பாரில் வருவாய், ரமணா வருவாய்; பரிவாய் தரிசனம்
தந்தருள்வாய்

சரணம்

I 1) புவனம் முற்றும் நீ நிறைந்தும், புவனம் உன்னுள்
அடக்கியவா
2) புவனமுய்ய புத்தமுது புவியில் பொங்க பூபதியே
வருவாய்
3) பூரணி பாலனே பூரண வதன பூமானே
புருஷோத்தமனே
4) பூமிநாதர் தந்தருளிய திருச்சுழியற் ப்ரஸாதமே
5) பூமகள் துதித்து நிற்கின்றாள்; புனிதா நின் வருகை
நோக்கியே
6) பூதலமெங்ஙணும் ஞான ஒளிதனை பரப்பிட
விரைந்தே வருவாய்.
(பாரில் வருவாய்)

II 1) பூவையர் நீரிட்டு பலவண்ண பூக்கோலங்கள்
தீட்டினர்.
2) பாவையர் குத்து விளக்கேற்றி பூச்சுண்ணம்
தூவுகின்றார்.
3) (வி)பூதி பூசி, பூதேவர் பூம்புகை பரப்புகின்றார்.
4) புனித நீர்க் கலசம் ஏந்தி, பூர்ணகும்பம்
கொண்டழைக்கின்றார்.

5) புலவோரும் வேதவிற்பன்னர் பலரும் மறை ஓதி
நிற்கின்றார்.
6) பூவையர் பூபாளம் பாடி பூமாரி பொழிகின்றார்.
(பாரில் வருவாய்)

III 1) பேரிகை மேளம் முழங்கின; மத்தளம் முரசுகள்
கொட்டின.
2) பக்தர் குழாம் பாலமுது கனி அறுசுவை உண்டி
படைக்கின்றார்.
3) பூஜை மணி ஓசை ஒலிக்க, கர்ப்பூர ஆரத்திகாட்ட
4) பூ பாலனே, பூலோக ரக்ஷகனே, பூவுலகு உய்ய,
5) பதித பாவனனே, மங்கள நாயகனே, ரமண
மெய்ப்பொருளே,
6) பாரில் வருவாய், தருவாய் தரிசனம்; அருள்வாய்
எமக்கு அழியா நிலையே



# 5. கொட்டு முரசே

ராகம் : ஹம்ஸத்வனி　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

1) கொட்டு முரசே — கொட்டு முரசே
வீடுபேறு கிட்டுமென்று கொட்டு முரசே
எட்டு திக்கு மெட்டக் கொட்டு முரசே -
வீடுபேறு கிட்டு மென்று வட்டமிட்டு எட்டுதிக்கும்
எட்டக் கொட்டு முரசே, கொட்டு முரசே.
வீடுபேறு கிட்டுமென்று அட்டியின்றி எட்டுதிக்கும்
எட்டக் கொட்டு முரசே, கொட்டு முரசே
கொட்டு முரசே களிப்போடு கொட்டு முரசே.

2) பரமஹம்ஸ ரமணர் வந்தார் என்று கொட்டு முரசே
சுந்தர மைந்தர் வந்தாரென்று கொட்டு முரசே
அழகு மைந்தர் வந்தாரென்று கொட்டு முரசே
ஆதிரையின்பின் வந்தாரென்று கொட்டு முரசே
புனர்வசுவில் வந்தாரென்று கொட்டு முரசே
ரமணர் வந்தாரென்று பாடிக் கொட்டு முரசே
ஹமஸத்வனியில் ஆடிப் பாடிக் கொட்டு முரசே
பரமஹம்ஸ ரமணர் வந்தாரென்று கொட்டு முரசே
பரவசமாய் ஆடிப்பாடிக் கொட்டு முரசே
பகவான் ரமணர் வந்தாரென்று கொட்டு முரசே!







## 6. ஊதுவோம் சங்கை



ராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி

1) *மங்கையரே நாமும், யமுனா நதிக்கரையில்*
*பங்கயக் கண்ணனைக் கண்ட கோபியர் போலவே*
*சங்கையற பல கோடி தவம் செய்தோம்*
*கங்கையணி ரமணனை அருணையில்*
*கண்டோமென்று*
*ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை*

2) *கயிலை சங்கரன் இங்கே நடந்து வரக் கண்டோம்*
*இதயகுஹ பரமனை திருவண்ணாமலை குஹையில்*
*கண்டோமென்று*
*ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை*

3) *தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபனை*
*அக்ஷர மணமாலையருளிய ரமணனை*
*கண்ணாரக் கண்டோமே என்று*
*ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை*

4) *உபதேச ஸாரமும், உள்ளது நாற்பதுவும்*
*உபதேசித்த தேசிகனைக் கண்டோமென்று*
*ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை*

5) *''ஐயே அதிசுலபம், ஆன்ம வித்தை'' யென*
*ஐயமற போதித்த ஐயனைக் கண்டோமென*
*ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை*

6) *அதி அத்புத ஆன்மீக அப்பளப்பாட்டை*
*அம்புவியாவும் பரந்தொலிக்க*

சந்ததம் சலிப்பற சந்தோஷமாகவே
ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை

7) சங்கர ரமணனை, நாகாபரணனை
சங்கராபரணத்தில் ஆராதித்து
ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை

8) சங்கர ரமணனை, சங்கட ஹரணனை
சங்கீதாம்ருதனை சரணடைந்தோமென்று
ஊதுவோம் சங்கை — ஊதுவோம் சங்கை
ஊதுவோம் வெண்சங்கை - ஓங்கார நாதமிட்டு
ஊதுவோம் ஆழி வெண்சங்கை.



# 7. கடைத்தேற வழியுண்டோ?

ராகம் : ஷண்முகப்பிரியா தாளம் : ஆதி

பல்லவி

*கடைத்தேற வழியுண்டோ ஐயா (நான்) — திருவருணை*
*அடைந்தும் நின்கருணைவிழி கொடுப்பாயின்றேல் —*
*ரமணய்யா (நான்)*
*(கடைத்தேற)*

அனுபல்லவி

*தேடி அலைகின்றேன் (உன்னை) (வழி) முடிவொன்றும்*
*காணேனே*
*(நிலைகுலைய, மனம் அலைய, மதிமயங்க*
*விதிசதி செய்ய) (தேடி)*
*பிடி கொடுத்தெனைக் கடைக் கணித்து,*
*தடுத்தாண்டருள்வாய் - ரமணய்யா (நான்)*
*(கடைத்தேற)*

**சரணம்**

*பாதை தெரியவில்லை, பேதை எந்தனுக்கு*
*பாதையொழிய, ஞான போதம் தந்தருள்*
*(ரமணேசா, பரமேசா, அருணேசா, ஷண்முகப்பிரிய ஈசா)*
*தொந்தம் விலக, தந்திரம் ஒன்றறியேன்*
*பித்தம் தெளிய மருந்தொன்றும் அறியேன்*
*தாமதமேனய்யா, சோதனை தகாதய்யா*
*சித்தமிரங்கி, பவபயமொழித்து அபயம்(தர)*
*(தந்து கடைத்தேற)*

# 8. கைவிடல் தகுமோ?

ராகம் : கானடா தாளம் : ஆதி

## பல்லவி

என்னை நீ கைவிடல் தகுமோ ரமணா
உன்னையன்றிவேறே தெய்வமெனக்கேதய்யா?
(என்னை நீ)

## அனுபல்லவி

தன்னை அறிதல் எளிது எளிது என்றனையே
உன்னருளன்றி எதுவும் எளிதில்லையே
(என்னை நீ)

## சரணம்

நம்பினோர் கெடுவதில்லை நான்கு மறை தீர்ப்பு
நின்னையே சரண்புகுந்தால் வேண்டும் நலம்
பெறலாமே
இன்னம் ஏன் தாமதம் உய்விக்க என்னையே
மனம் உவந்து வரம் தந்து அருள்வாய் நின் பதமே
(என்னை நீ)




# 9. சரணார விந்தம்

ராகம் : பூர்வி கல்யாணி                                   தாளம் : ஆதி

## பல்லவி

உந்தன் சரணாரவிந்தமே சரணம் ரமணா
எந்தன் மரணாதிபந்த மொழிக்கும் காலஹரணா
*(ரமணா, கருணா, அருணா, வருணா)*
*(உந்தன் சரணாரவிந்தமே)*

## அனுபல்லவி

உந்தன் கமலப்பதமே நிதமே நினைந்துருகும்
எந்தன் அவல நிலை நீக்க காலதாமதமேனோ?
*(விமலா, அமலா, அசலா)*
*(உந்தன் சரணாரவிந்தமே)*

## சரணம்

உன்னையே நம்பும் அடியர் தம்மை அகற்றிடில்
உன்னையேபழிப்பர் எவ்வடியார் போற்றிடுவர்?
தன்னையே அறிய பற்றினேன் நின் பற்றை
இன்னமும் மற்ற பற்றறேல் யார் பொறுப்பு சற்றே
சொல்லய்யா
*(ரமணய்யா, அருணய்யா, முருகய்யா)*
*(உந்தன் சரணாரவிந்தமே)*

தேஹம் - நாஹம்; கோஹம்? - ஸோஹம் - I am not the body; Who am I? I am He (Soham) - Is the quintessence of Wisdom

## 10. ஏதுமறியேன்

ராகம் : மோஹனம் தாளம் : ஆதி

பல்லவி

மோஹன ரூபா, மௌனோபதேசா
மஹேசா, ஜகதீசா, ரமணேசா

*(மோஹன ரூபா)*

சரணம் : 1
*(ஸமஷ்டி சரணம்)*

தேஹமே அஹமெனும் மோஹமொழிந்திட
கோஹம் விசாரம் செய்து, தேஹம் நாஹம்
ஸோஹம் சிவோஹம் என்னும் மெய்ப்பொருள் - ஸந்
தேஹமற விளங்க விவேஹமருளும்

*(மோஹன ரூபா)*

சரணம் : 2

யாகமறியேன், யோகமறியேன், ஆகமமுமறியேன்
ராகமறியேன், ச்லோகமறியேன், ஸாஸ்திரமுமறியேன்
மோக்ஷமறியும் மார்க்கம் நானறியேன் – உன்றன்
கடாக்ஷ வீக்ஷண்யம் ஒன்றே என்னை ரக்ஷிக்கும்.

*(மோஹன ரூபா)*



# 11. ஓடித்தேடி அலைந்தேனே

ராகம் : யமுனா கல்யாணி தாளம் : ஆதி
ஸ்ருதி : மத்யமம்

பல்லவி

*அங்குமெங்கும் ஓடித்தேடி அலைந்தேனே*
*இங்கும் நீ என்னுள் ஒ்ளிர்வதை அறியேனே*
*(அங்குமெங்கும்)*

அனுபல்லவி

*ஓங்கும் அருணைகிரி வடிவோனே*
*ஏங்குமென் நெஞ்சிலும் குடி கொண்டோனே*
*வீங்கு புகழ் ஜோதி வடிவான வேலனே*
*தாங்கு வாயெனை ஒருபோதும் கைவிடாமலே*
*(அங்குமெங்கும்)*

சரணம்

*பாங்கொன்று மறியேன் உனை பஜிக்க*
*தங்குமிடமறியேன் உனை ஸ்மரிக்க*
*பங்குமெனக்கேது உனை அறிய*
*தூங்குமெனை நீ தட்டி எழுப்பாயோ?*
*1) ரமணய்யா, தங்கக்கையா (தூங்கும்)*
*2) அருணய்யா, பொங்கு கருணய்யா(தூங்கும்)*
*(அங்குமெங்கும்)*



# 12. நான் கோரும் வரம்

ராகம் : நாதநாமக்கிரியை தாளம் : ஆதி
ஸ்ருதி : மத்யமம்

பல்லவி

அமைதி தழைக்க அருள்வாய் — ரமணா
அமைதி தழைக்க அருள்வாய் — உலகில் பேர்
அமைதி தழைக்க அருள்வாய் — ரமணா
நிம்மதி நிலவ அருள்வாய் — வாழ்வில்
நிம்மதி நிலவ அருள்வாய் — ரமணா
(அமைதி)

அனுபல்லவி

சிவசிவ என்றே, சும்மா இருக்க நீ பணித்தால்
ஜீவநாசமுறுமே, ஞான போதம் வருமே
(அமைதி)

சரணம்

தேஹாத்ம பாவம் துறக்க அருள்வாய்
ஆத்மானுபூதி பிறக்க அருள்வாய்
ஸஹஜ நிலையில் மனம் நிலைக்கச் செய்வாய்
ஸதானந்தத்தில் எனை திளைக்கச் செய்வாய்
நான் கோரும் வரமிது சிவரமணா
நான் கோரும் வரமிதே சிவரமணா
(நான் கோரும் வரமிது அருணை ரமணா
நான் கோரும் வரமிதே அருள் ரமணா)
(அமைதி)





# 13. குயில் பாட்டு

ராகம் : மாண்டு　　　　　　　　　　　　தாளம் : ஆதி

*கேள்வி (1)*

*அலை அலையாய் வரும், எண்ணக்குவியலை அழிக்க*
*வழியொன்று கூறாய் — குயிலே*
*வழியொன்று கூறாய் — கானக்குயிலே*
*வழியொன்று கூறாய் — ஞானக்குயிலே*

*பதில்*

*எண்ணக்குவியலை அழிக்க, வழியொன்றிருக்குது – நங்காய்*
*வழியொன்றிருக்குது, நீ கேள்.*
*''நான் யார்'' எனும் கூர்வாள் கொண்டு*
*அழித்திடலாம் மனத்தையே — தங்காய்*
*அறவே அழித்திடலாமே.*

*கேள்வி (2)*

*எனையே இழந்து நித்யானந்தத்தில்*
*நிலைத்திருப்பதெங்ஙனம்? — குயிலே*
*நிலைத்திருப்பதெங்ஙனம் — ஞானக்குயிலே?*

*பதில்*

*கண்மூடி, வாய்மூடி, சும்மா அமர்ந்து*
*உன்னுள் ஆழ்ந்து, ''நான்'' எழும் மூலத்தில்*
*லயித்தால் — தங்காய், நல்ல தங்காய்*
*உனை இழந்து நித்யானந்தத்தில் திளைப்பாய்*
*நங்காய், அன்பு நங்காய்.*





கேள்வி *(3)*

மாண்டு, மாண்டு, மீண்டும், மீண்டும்
ஜனிப்பதென்பது
ஓய்ந்திடும் நாள் எந்நாளோ? — குயிலே
ஓய்ந்திடும் நாள் எந்நாளோ? —
ஞானக்குயிலே.

பதில்

ஊனுடல் வெறும் உடைதானென்றும், தான் நித்ய
பரமாத்மா வென்றும்
உணர்ந்து விட்டால், அன்புத்தங்காய்
ஜனனமரணமொழிந்து சிரஞ்சீவியாவாய்.
சஞ்சலம் யாவும் நீங்க, ''நான் யார்'' என்னும்
விசார மார்க்கமே நேர் மார்க்கமடீ
தங்காய் — அன்புத்தங்காய்
அதுவே, அருணை ரமணனின் ஞானமார்க்கமடீ.



கேள்வி (4)

ஞானமார்க்கம் கடினமென்றால் நானுய்யும் வழி
வேறுண்டோ?
சொல்லாய் — இன்னிசைக்குயிலே.

பதில்

ஞானமார்க்கம் கடினமென்றால் கலியுகத்தில் — நீ
ரமணன் புகழ் பாடி, பக்தி புரிவாயடி
பெண்ணே — பக்தி புரிவாயடீ.
அவனையே சரணடைவாயடீ — அன்புத்தங்காய்
அதுவே பரபக்திஈயுமடீ — அதுவே யாவுமடீ.

வாரும், வாரும் காரிகையீர், நாம், ரமணா,
ரமணாவென்று
பண்ணிசைத்துப் பாடி மகிழ்வோமடீ —
எந்நாளும்
அவனையே — சரணடைவோமடீ
ரமணனை சரணடைவோமடீ — சிவ (அருணை)
ரமணனை சரணடைவோமடீ — அவன்
அடி சேர்வோமடீ, திருவடி சேர்வோமடீ,
அவன் திருவடி சேர்வோமடீ.





# 14. பொன்வண்டே

ராகம்: வஸந்தா தாளம் : ஆதி

### பல்லவி

பொன்வண்டே ரீங்காரம் புரிகுவாய்
(ஜங்காரத்வனியில், ஓங்கார நாதம் கூட்டி,
ஸுஸ்ருதியில்)
பொன்னொளிர் மேனியான், பொற்சுழியற்
வேங்கடரமணன்
புனர்வஸுத்திரு நாள் புவியில், அவதரித்தான்
ஸ்ரீ ராமன் போல்
புனர்ஜன்மமில்லை அவனைப் பணிவோடு
தரிசித்தப் பேர்க்கு
(என்று, பொன்வண்டே)

### அனுபல்லவி

அவனியெல்லாம் ஞான ஒளிபரப்பும் அருணை ரமணன்
அவனிரு பாதம் தொழுவீர், வெறும் மானிட -
னென்றேமாறா(து)
(தென்று பொன்வண்டே)

### சரணம்

மந்தஹாஸ வதனன், மௌனோபதேசிகன்
சாந்தஸ்வரூபன், ஸர்வலோக ஸம்ரக்ஷகன்
காந்தக் கண்ணால் காமாதிக் கட்டவிழ்த்து
சொந்த நிலை நிற்க, வஸந்தம் வந்தது, வாழ்வில்
ஸஹஜம் வந்தது — (என்று பொன்)





முடுகு

பொன்வண்டே ரீங்காரம் புரிகுவாய் - ''நான், நான்'' என்று

1) ரமணன் பொற்பாதத் தாமரையில் தேனமுதுண்டு
களிக்கும் வண்டே (ரீங்காரம் புரிகுவாய்)

2) அவன் பொற்பாதத் தாமரையில் தேனமுதுப்
பருகிப்பாடும் வண்டே (ரீங்காரம் புரிகுவாய்)

3) அவன் பொற்பாதத் தாமரையில் தேனமுதுப்
பருகிப் பாடி பறக்கும் வண்டே (ரீங்காரம்
புரிகுவாய்)





# 15. அந்நாள் எந்நாளோ?

ராகம் : ஸஹானா  தாளம் : ஆதி

பல்லவி

அந்நாள் எந்நாளோ — (ரமணா) எந்தன் வாழ்வின்
பொன் நாளாகும் அந்நன்நாள் எந்நாளோ?
(அந்நாள்)

அனுபல்லவி

என்னுள்ளே அஹமஹமென நடனமிடும்
என்னான்ம ஸ்வரூபனாமுன்னை உணர்ந்தடங்கும் நாள்
(அந்நாள்)

சரணம்

பன்னெடு நாளாய் அங்குமிங்கும்
உன்னைத் தேடி அலைந்தேனே
பன்முகமாய் எண்திசையும் ஓடித்திரியும் என்னை
உண்முகமாய் உன்னைக் கண்டனைத்தும் ஒடுங்கி
தன்னுள்ளே நானாய் ஒளிர்ந்திடும் ஆனந்த நாள்
(அந்நாள்)



## 16. சம்போ சிவ ரமணா

ராகம் : ஜோன்புரி

தாளம் : ஆதி

### பல்லவி

*சம்போசிவ ரமணா, சரணாகத வத்ஸலா — உன்னை*
*சரணடைந்த பின்னர், சஞ்சலங்கள் ஏது எனக்கே?*

*(சம்போ சிவ)*

### அனுபல்லவி

*சுமைதாங்கி நீ இருக்க, எமக்கென்ன குறையோ?*
*சுமையனைத்தும் உன் சரண் இறக்கிச் சும்மா இருக்கச் செய்த*
*(சம்போ சிவ)*

### சரணம்

*சும்மா இருத்தலே என் கடன், என்னைச் சுமப்பது*
*உன் கடனன்றோ? (ரமணா)*
*அம்மையப்பன் நீ யன்றோ, எனக்கென்றொன்றுள்ளதோ?*
*இம்மையும் மறுமையும் உன் அடிமை அன்றோ நான்?*
*எம்மையும் நீ இருக்க, இம்மித்துன்பும் எனை அண்டுமோ?*
*(சம்போ சிவ)*



## 17. நீயே கதி

ராகம் : தோடி    தாளம் : ஆதி

### பல்லவி

அருள் மிகு அழகம்மை பாலனே, சுந்தரர் மைந்தனே
அருணை சிவன் உவந்தளித்த முருகையனே
கருணை சொரிய தரணி வந்தவதரித்த ரமணேசனே — உன்
இருகழலினைப் பிடித்தேன், இனிகைவிடலாகாதே
(அருள்மிகு)

### அனுபல்லவி

நீயே கதியென நின்னையே சரணடைந்த பின்னர்
நீயே என்னைக் கைவிடில் என்னாகும் என் கதி — ரமணேசா?
அடியாரைக்காக்கும் நின் புகழ் தான் என்னாகும்?
அடியவள் யானோ வேறெங்கு ஏகி யாசிப்பேன் - ரமணேசா?
(அருள் மிகு)

### சரணம்

சுந்தர முறுவலால் உள்ளம் கொள்ளை கொண்டவனே
அந்தரமெலாம் ஆட்டிப்படைக்கும் பரந்தாமனே
விந்தையல்லவோ நின் திருவிளையாடலனைத்துமே
முந்தைவினைப் பயனோ, ஏனோ எனை உன்னடி
சேரப் பணித்தாய்
பந்ததொந்த மெலாம் விலகி, பரமானந்தத்தில் திளைத்திட
தந்தருள்வாய் ரமணா, நின்னருட் ப்ரஸாதம் தனையே
(அருள் மிகு)

## 18. ஆரே அறிவர்

ராகம் : காம்போதி தாளம் : ஆதி

### பல்லவி

ஆரே அறிவர் அவர் பெருமை
அருணை ரமணரின் மாதவ மகிமை
ஆராத்துயர் துடைத்து, ஆரா அமுதம் படைத்து
பேரானந்தம் தரும் அவர் புரி அதிசயம்
(ஆரே அறிவர்)

### அனுபல்லவி

பிறவிப்பிணி அகற்றி மரணபயம் தனைப்போக்கி
பிறவிப்பயன் ஈதென்று புவியில் ஐயமறத் தானே
பிறர்காண வாழ்ந்து பரிவுடன் வழி வகுத்த வரதனை
(ஆரே அறிவர்)

### சரணம்

1) அரியும், அரனும், ராமரெனவும், ரமணரெனவும்
அரும் பெரும் கருணையால் அவதரித்தனர் அவனியில்.
அரிது, அரிது மானிடப் பிறவி என்பர்; அதனினும்
அரிதன்றோ ராம ரமணரின் சொரூபம் கண்டுய்ந்தோர்
(ஆரே அறிவர்)



2) அரியதொரு கனி நம் கையிடை அடையப்
பெற்றும் அதை
அரிந்து உண்ணும் திறம் அற்றவரெனின்,
யாது பயன் கொல்லோ?
அரியதொரு வாய்ப்பாம் தரிசித்தும் ரமணரை அறியாதார்
அரியாசனம் உற்றும் அரசு புரியா அறிவிலி அன்றோ?
(ஆரே அறிவர்)



# 19. ஜயபேரிகை

ராகம் : ஆபேரி                                    தாளம் : ஆதி

1) கங்கு கரையற்று பொங்கும் கருணை ரமணன்
நம்முள்ளே
கங்குல் பகலற ஜோதி ஸ்வரூபமாய் ஜ்வலிக்க
அங்கும் இங்கும் எங்கும் ஓடித் தேடி அலைவதுவும்
ஏனோ?
தெய்வப்புகழுடை ரமணனை தரிசித்த பின்னர்
தெய்வகற்புடை அடியார், பிறர் பின்பு ஏகுவரோ?
இங்கு யாம் பெற்றபேறு யாரே பெறுவர்?
ஓங்கு பரசிவனை இப்பாரில் கண்டுய்ந்தோமென்று
பேரிகை கொட்டுங்கள், ஜய பேரிகை கொட்டுங்கள்,
கொட்டுங்கள்

2) சங்கம் ஓங்க இன்பம் பொங்க ஜய பேரிகை
கொட்டுங்கள்
ரமணா ரமணா என்றே ஆடிப் பாடி, ஜய பேரிகை
கொட்டுங்கள்
ஜயஜய ரமணா என்றே ஆபேரியில் பாடி பேரிகை
கொட்டுங்கள்
ஜயஜய ரமணா என்றே மங்களம் முழங்க பேரிகை
கொட்டுங்கள்
உலகம் உய்ய மங்களம் பொங்க ஜய பேரிகை
கொட்டுங்கள்
ஆனந்தமாய் ஆபேரியில் பாடி ஆடி ஜய பேரிகை
கொட்டுங்கள்
ரமணா, அருணா, வருணா, கருணா என்றே அவன்
நாமம் பல நவின்றே
பேரிகை கொட்டுங்கள், ஜய பேரிகை கொட்டுங்கள்,
கொட்டுங்கள்

3) திருச்சுழி ரமணா, அருணை ரமணா, சுந்தர ரமணா, அழகு ரமணா
என்றெலாமிசைத்தே கொட்டுங்கள் பேரிகை; பேரிகை கொட்டுங்கள்
ஜயஜய ரமணா, ஜயஜய ரமணா, சிவ சிவரமணா ஸத்குரு ரமணா.
ஜயஜய ரமணா, ஹரஹர ரமணா, ஜயஜய சங்கர ஜயஜய ரமணா

சிவ சங்கர ஜய, சுந்தர ரமணா
குருகுஹ ரமணா, திருவருள் ரமணா

ரமணா, ரமணா, வேங்கட ரமணா
ரமணா, ரமணா, வேங்கட ரமணா

ரமணா, ரமணா, அருணை ரமணா
ரமணா, ரமணா, அருள்புரி ரமணா

ரமணா, ரமணா, சரணம் ரமணா
ரமணா, ரமணா, சரணம் ரமணா

சரணம் சரணம் சரணம் ரமணா
சரணம் சரணம் சரணம் ரமணா

சரணம் ரமணா, சரணம் ரமணா
சரணம் ரமணா, சரணம் ரமணா



# 20. ஓமெனும் ஒலியின்

ராகம் : ஆனந்த பைரவி

தாளம் : ஜம்பை
(10 அக்ஷரம்)

## பல்லவி

ஓமெனும் ஒலியின் உருவான அருணை குஹ ரமணா
ஓரெழுத்தில் ஆறெழுத்தைத் தந்தைக்குபதேசித்த
ஸ்கந்த ரமணா
ஒருருவும், ஒரு பெயரும், ஒருகுணமும் இல்லாதும்
அனைத்துமாய் இருக்கும் - உன்னை
ஓங்காரத்தில் கண்டுய்ய ஆசைக்கொண்டேன்,
புறக்கணிக்கலாகாதே
(ஓமெனும்)

## அனுபல்லவி

எந்நேரமும் என்னுள்ளே ''நான், நான்'' என்று
ஸ்புரிப்பவனே
எந்நேரமும் உன்னையே ஸ்மரிக்க அருள் புரிவாயே
(ஓமெனும்)

## சரணம்

தங்கம் பொலி காலையும், இருள் மலிநிசியும் உன் திரு
உருவமன்றோ?
தேங்கு நீர்நிலையும், தேசுரு நிலவும் உன் திவ்ய
தோற்றமன்றோ?
வீங்கிள வேனலும், வீசும் தென்றலும் உன் எழில்
வடிவமன்றோ?

பாங்கு பசும்சோலையும், பாய்ந்தோடும் நதியும் உன்
பிம்பமன்றோ?
ஓங்கு மலையும், அலைபொங்கு கடலும் உன் அருட்
காட்சியன்றோ?
பொங்கும் இன்பும், மங்கும் துன்பும் பாரில் நின் மாயா
லீலையன்றோ?
அங்கிங்கெனாதெங்கும் நிறைந்து, எட்டியும்
எட்டாமலிருப்பவனே
எங்ஙனம் உனை மறந்து நான் உயிர் வாழ்வேன்,
ரமணா?
எங்ஙனம் உனைமறந்து நான் ஆனந்தபைரவியில்
லயிப்பேன்?
எங்ஙனம் உனைத் துறந்து, நான் பேரின்பம்
துய்ப்பேன்?
(ஓமெனும்)



## 21. அருணை ரமணா

ராகம் : காப்பி        தாளம் : ஜம்பை (10 அக்ஷரம்)

### பல்லவி

*அருணை ரமணா உன்னை யாரெனச்சொல்லி யான்*
*துதிப்பேன்?*
*திருவாதிரையில் அவதரித்தாயென ''ஹரனே நீ''*
*என்பேனோ?*
*புனர்வஸுவிலவதரித்தாயென ''ஹரியே நீ'' என்பேனோ?*
*புனர்ப்பிறவி எனைப்பற்றாது பாலித்தருள்வாய் ஹரிஹர*
*ரமணா*
*(ஹரி ஹர ரமணா, ஹரிஹர ரமணன் அன்றோ நீ?)*

### அனுபல்லவி

*சுந்தரர் அழகம்மை சூட்டிய திருநாமம் வேங்கட*
*ராமனன்றோ?*
*சுந்தர திருப்பதி கொலுவிருக்கும் வேங்கடாசலபதி*
*நீயன்றோ?*
*மதுரை மீனாக்ஷிதாய் மடிவிட்டு தந்தை மடி தாவின*
*பாலனன்றோ நீ?*
*மதுரகவி கணபதி முனிக்கு ஸ்கந்தனென(வே) காக்ஷி*
*தந்தவனன்றோ?*
*(வேங்கட ஸ்கந்த ரமணா, வேங்கட ஸ்கந்த ரமணனன்றோ நீ?)*

### சரணம்

*மாதத்தில் சிறந்த மார்கழியிலவதரித்த மாதேவே (நீ)*
*மாதரில் புனித மரியம்மாள் தந்த ஏசு நாதனன்றோ நீ?*

முகவை முருகனார் பாடிய வீரமாமுனியன்றோ நீ?
முகம்மது நபி நாயகமும் நீயன்றோ, கௌதம புத்தரும்
நீயன்றோ?
*(பரமாத்ம ரமணா, பரமாத்ம அருணை
ரமணனன்றோ நீ) (2)*



# 22. ஆரா அமுதே

ராகம் : நாதநாமக்கிரியை                                    தாளம் : ஆதி

### பல்லவி

*ஆரா அமுதே, அருணாசலமமர்ந்த அரசே*
*ஞானாமுதமே ரமணா, கருணாஸாகரமே*
*யானாகிய என்னை, அறவே விழுங்கி, வெறும்*
*தானாய்த்தனித்திருக்கும் நிலை அருள்வாய் தயாபரனே.*
*(ஆராமுதே)*

### அனுபல்லவி

*நானே அஹமெனும், மாயை மாயாதோ?*
*''நான் யார்'' எனும் மெய்ம்மை மிளிராதோ?*
*(ஆராமுதே)*

### சரணம்

*நாதா முதமாகிய ரமணா, நின் திருநாமத்தை*
*நாத நாமக்ரியையில் துதிப்பதல்லாது*
*நாதா, ரமணா, ஸாதனை வேறொன்று மறியேன் (ஏழை)*
*நாத மூலமே (ரமணா) நான்எழும்மூலமதில்அடங்க அருளாய்*
*(ஆராமுதே)*

1204: பற்றற்ற பற்றாம் அப்பற்று அன்றிப் பற்றும் தீத்
தொற்றற்ற நீர்மையால் தூயோராய்ச் சிற்றும்
வருவாத வாய்மையால் வேங்கடவன் பாதம்
தொழுவார் கட்கு இல்லை துயர்

# 23. ஹரஹர ரமணா

**ராகம் : கரஹரப்பிரியா** **தாளம் : திருபுடை (கண்ட ஜாதி)**

### பல்லவி

ஹரஹர ரமணா நின் திருவடிதனை இறுகுறப்பிடித்தேன்
கரஹரப்பிரியநாதனே, ரமணா, எனைக் கைவிடலாகாதே
கரம் கூப்பிக் கதறுகிறேன், இனி எனைக் கைவிடலாகாதே
*(ஹரஹர)*

### அனுபல்லவி

தேஹமே நானென தஹிக்கும் நோயிற் சிக்கிப்
பரிதவிக்குமென்
தேஹாத்ம நிலை நீக்கி நிஜ நிலையில் நிலைத்துத்
திளைக்க அருளாய்
*(ஹரஹர)*

### சரணம்

*பரிபூரணானந்தமே பற்று முற்றும் உனையே பற்றும்*
*அடிமை*
*பரிதவித்தலழகோ, பராமுகம் முறையோ, இது தகுமோ?*
*பரிகசிப்பரன்றோ பாரில் என் நிலை கண்டோர்*
*பாரொளிர் பரிதியே (நின்னை) (ரமணா)*
*பரிந்துவந்தித்தருணம் அஞ்சேல் என செஞ்சொல்*
*தந்தபயம் அருள்வாய் (ஹரஹர)*

- மற்றுப் பற்றெனக்கின்றி நின் பாதமே பற்றினேன்



- பற்றுக பற்றற்றனை

# 24. அண்ணாமலையில்

காவடிச்சிந்து மெட்டு தாளம் : திருபுடை(கண்ட ஜாதி)
ஸ்ருதி : மத்யமம்

*1) அண்ணாமலையில் அண்டமெலாமுள்ளடக்கி*
*அசலமாய் அமர்ந்து*
*உண்ணாமுலையம்மையுடன், ''அஞ்சேல்'' எனும்*
*செஞ்சொல் சொல்லி*
*செங்கோல் செலுத்திவரும் செல்வச் செம்மலே*
*சிவ ரமணா*
*நெஞ்சுநைந்துருகி தஞ்சமென, கஞ்சத்தாள் கெஞ்சும்*
*நஞ்சு மனத்தாள், மடமங்கை ஜன்மம் கடைத்தேற*
*கொஞ்சம் கடைக்கணிக்காயோ - சிவரமணா, சிவரமணா*

*2) அண்ணாமலையில் அரியும் அயனும், தேடி*
*அடி - முடி காணா*
*அங்கியுருவாயொளிர், செங்கண் நுதல்,*
*கங்கை யணி - சிவரமணா*
*அங்குமிங்குமோடி, எங்கும் காணாதிங்கே,*
*மானிட உருவில் கண்டு*
*அஞ்சி அஞ்சி, பிஞ்சகனுன் செங்கமலத்தாள்*
*கெஞ்சி இரைஞ்சும்*
*அஞ்செழுத்தோதாள், துஞ்சு முகத்தாள்; ஜனன*
*மரணம் நீங்க*
*சஞ்சீவினி தாராய் பொற்கையால் இப்பேதைக்கு*
*சிவரமணா, சிவரமணா*



# 25. மூச்சிருக்கும் வரை

ராகம் : முகாரி　　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

### பல்லவி

மூச்சிருக்கும் வரை உச்சரிக்க வேண்டும் உன் நாமம்
பேச்சிருக்கும் வரை பேச வேண்டும், உன் புகழே
- உன் விழி
வீச்சிருக்கும் வரை என்னிச்சை நிச்சயம் ஈடேறும் - ரமணா
(என் மூச்சிருக்கும்)

### அனுபல்லவி

நீச்சலறியா நான் நீள் பிறவிகடல் நீந்தி கரையேற
அச்சம் நீக்கி, தூக்கியெனை அக்கரை சேர்த்திடுவாய் - ரமணா
(என் மூச்சிருக்கும்)

### சரணம்

கூச்சமாகுதே கணக்கற்ற என் குற்றம் குறைக்
கூற்றை உரைக்க
துச்சமெனத் ''தூ'' என்றெனைத் தூற்றித் துரத்திடாது
பச்சிளம் பிள்ளையென பொறுத்தருளி, யாவையுமே
பக்ஷித்தருள்வாய் ப்ராணனோடெனை ரமணப் பிரபோ...
(என் மூச்சிருக்கும்)





## 26. உலகம் யாவையும்

ராகம் : ஆரபி                                    தாளம் : ஆதி

(''பிருந்தாவனமும்'' எனும் மெட்டு)

*(1)*

*உலகம் யாவையும் உளவாக்கலும் நிலை*
*நாட்டலும் நீக்கலும் நின்திருவிளையாட்டன்றோ?*
*நீ நினைத்தாலா காதது முண்டோ?*
*நின் கருணைவிழி என் மேல் வீழாதோ?*

*(உலகம்)*

*(2)*

*மீனவன் வலையிற் சிக்கிய மச்சமென*
*மாயவன் வலையிற் சிக்கித் தவிக்கும் - என்*
*பேயகந்தை யொழிய பாழ்வினை போக்கி*
*மெய்நிலை யுணர்த்தி மாயை நீக்காயோ?*

*(உலகம்)*

*(3)*

*முன்னே பளிச்சிட தீபச்சுடரொளி*
*மின்மினிப் பூச்சி ஒளி தருமோ?*
*ஞானச் சுடர் ரமணா நீ விளங்க,*
*நானெனும் பொய்யகந்தை வாழுமோ?*

*(உலகம்)*



(4)

அலைபடுகடலென மத்துறு தயிரென
என் மனம் கலங்குதல் மடமையன்றோ?
எல்லாம் வல்லோன் என்னுள்ளிருக்க
எனக்கென்ன கவலை எனக்கென்ன வேலை?

(உலகம்)



# 27. ஓடப்பாட்டு

ராகம் : சிந்து பைரவி தாளம் : ஆதி

### பல்லவி

உலகமெனும் மாயைக்கடலில், வாழ்க்கை எனும் படகை
செலுத்திக் கரையேற ஸ்ரீ ரமணர் துணை வேண்டுமே *(2)*
*(உலகமெனும்)*

### அனுபல்லவி

ஊழ்வினை மாலுமியால், பாழகந்தை துடுப்பாலே
ஆழ்க்கடலில் சிக்கி ஓடம் அழுந்திக் கவிழாதிருக்க
ரமணர் துணை வேண்டுமே, ரமணர் துணை வேண்டுமே.
*(உலகமெனும்)*

### சரணம்

நீர்மேல் போகும் ஓடம், நிலைமாறி உலகெனும்
நீர் உள்ளே புகுந்தால், மூழ்கிடுமே ஓடம் *(3)*
நீர் தாமரை இலை மேலே, நில்லாது போல்
நிர்மலமாக்கி உலகாசை எனைப்பற்றாமல்
என்றுமென் உள்ளத்தே, நீ இருப்பாய் ரமணா *(3)*
*(உலகமெனும்)*



## 28. மாதெய்வமே

ராகம் : சாமா　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

### பல்லவி

மா தெய்வமே ரமணா, எனை ஆட்கொள்ளாயோ?
மாமயக்க திரைநீக்கி, மாயையினின்று மீட்காயோ?
(மாதெய்வமே)

### அனுபல்லவி

அகந்தை மமதையெனும் மாசை அறவே அகற்றாயோ?
அகமாகிய உன்னில் ஸதா ரமிக்கச் செய்யாயோ?
(மாதெய்வமே)

### சரணம்

உன்னிலே எனைக்கரைத்து நான் அழிந்திட அருளாயோ?
உன்னையே அனைத்திலும் கண்டுவந்து அவை யாவும்
நின் உருவே என்றுணர்ந்து நெகிழ்ந்துருகி வணங்கேனோ?
நின்னையன்றி அணுவும் அசையாதென்றறிந்து
அடங்கேனோ?
(மாதெய்வமே)



# 29. அஹிம்ஸா மூர்த்தி

ராகம் : நவ ராகமாலிகை  தாளம் : ஏகம்

பல்லவி

1) பெஹாக்

*மாந்தரினும் மாக்களும் புள்ளினமுமே மாதவம்*
*புரிந்தனரோ?*
*மாதேவன் ரமணன் செய்த மாயம்தான் ஏதோ?*
*(மாந்தரினும்)*

அனுபல்லவி

2) ஹிந்தோளம்

*கோசாலையுள் ரமணபகவன் புனித பாதம்*
*படும் முன்னே*
*கோலக்ஷ்மி தன் தொழுவத்துள் புக மறுத்ததும்*
*பசுபதி ரமணனின் ஜயந்தி நாள் தோறும் ஓர் கன்று*
*பசுலக்ஷ்மி ஈன்றதும் விந்தையினும் விந்தையன்றோ?*
*(மாந்தரினும்)*

சரணங்கள்

3) ஹம்ஸாநந்தி

*1) என்ன புண்ணியம் ஈட்டினரோ? எண்ணிலா*
*அணில்கள் அனுதினமும்*
*ரமணன் புஜத்தில் ஓடி ஆடி கரத்தில் கடலை கொரித்தனரே.*
*(மாந்தரினும்)*

4) கமாஸ்

*2)* குடும்ப ஸகிதமாய் வந்திடுமே, குரங்குகள் ரமணன் சபைக்கு
குடும்ப சச்சரவு, கக்ஷிபூசல் தீர்ந்து திரும்புமே மகிழ்ச்சியாய்
(மாந்தரினும்)

5) ஸாரங்கா

*3)* கருப்பனும் நாய்கள் பலவும் வாலைக்குழைத்தோடி வருமே
அருகில் ரமணன் இருக்க, அன்பாய் பூனையொடு விளையாடுமே.
(மாந்தரினும்)

6) பாக்ய ஸ்ரீ

*4)* வெள்ளை மயிலும் நீலமயிலும் தோகை விரித்தாடுமே ஸந்நிதி எதிரே
கிளி கொஞ்ச, குயில்கூவ, வண்டு ரீங்காரம் இசைக்குமே
(மாந்தரினும்)

(மத்யம ஸ்ருதி) 7) குந்தலவராளி

*5)* காக்கையும் குருவியும் கூடு கட்டி, தம் குஞ்சுடன் கூடி குலவுமே
காக்கும் ரமணன் கையில் கீறல் முட்டையும் ஒன்று கூடுமே.
(மாந்தரினும்)



## 8) புன்னாகவராளி

*6) கருநாகம், மலைப்பாம்பு மற்றும் வன*
*விலங்கினங்களும்*
*கருணாமூர்த்தி ரமணனை வலம் வந்து வந்த வழியே*
*விரைந்திடுமே.*
*(மாந்தரினும்)*

## 9) யமுனா கல்யாணி

கிருமி, கீடம், பறவை, தாரு, உருமுதலாமெல்லா உயிரும்
ஒருபோதும் நாசமுற செய்யவொணாதென செப்பிய
அரும்பெரும் அஹிம்ஸாமூர்த்தி, ரமணனைப்
போற்றித் துதிப்போம்
திருவருள் அவன் நல்க, அவன் திருப்பாதம் தனில்
பணிவோமே.



## 30. என்ன தவம்

ராகம் : சுருட்டி　　　　　　　　　　தாளம் : ரூபகம்

பல்லவி

என்ன தவம் செய்தேனோ நான் தேவாதி தேவரமணா
உன்றன் திவ்ய தரிசனம் எனக்கு நீ தந்தருள
(என்ன தவம்)

அனுபல்லவி

சின்ன வயதில் அன்புடன் எனை அண்ணாமலைக்கு
அழைத்தனையே
புன்முறுவல் பூத்தெனை அன்றே உன் வசம் ஈர்த்தனையே
உன் கருணைக் கண் வீச்சில் நான் சிக்க உன்தன் சுடர்ப்
பூச்சியாக்கினையே
உன் கஞ்சத்திருவடியில் அஞ்சேலென தந்தனையே தஞ்சம்
(என்ன தவம்)

சரணம்

உன் அடியர்தாம் நினைப்பதெல்லாம் தரும் கற்பகத்தருவே
உன் அருளை நினைக்கின் ஊனும் உருகுதே,
உள்ளமும் குழையுதே
உன் பேரருள் பெற்றபின் என் வாழ்நாளெல்லாம்
பொன் நாளே யன்றோ
உன்னை என் சொலி நான் வாழ்த்துவனே,
என்ன கைம்மாறு நல்குவனே?
(என்ன தவம்)



# 31. கலியினில் அவதரித்தவன்

ராகம் : பிலஹரி

தாளம் : ஆதி

## பல்லவி

*கலியினில் அவதரித்த காருண்யனே; காலனை காலால்*
*உதைத்த காலாதீதனே*
*கோல சுடர்விழியால்வல்வினை அறுப்பவனே; கொல்லாயோ*
*எந்தன் அல்லல்தரும் அகந்தையினை?*
*(கலியினில்)*

## அனுபல்லவி

*பொல்லா எந்தன் குணம் போக்கிடவே வல்லவன் நீ*
*அல்லையோ ரமணா*
*சொல்லாமல் அறிந்திடாயோ எந்தன் உள்ள(த்து)*
*மாசனைத்தும் களைந்திடவே?*
*(கலியினில்)*

## சரணம்

*1) நல்லடியரொடு நானும் சேர்ந்திட அருள்புரிவாயே*
*குருநாதா*
*நில்லாதவற்றை நிலையினவாய்க் கொண்டுவக்கும்*
*எனை உய்விக்கலாகாதா?*
*ஆலின் நீழற்கீழ் நால்வர்க்கு ''சொல்லற நில்'' எனச்*
*சொல்லாமல், சொல்லியவா*
*சலியாமல் நான் உன்தன் சுகக்கடலில் சும்மா இருக்கச்*
*செய்யாயோ?*
*(கலியினில்)*



2) நல் அருணாசலம் எய்திடென எனைக் கூவி
அழைத்தவனே
கல்லாப் பொல்லேனின் புலம்புதல் உந்தன் செவி
புகவிலையோ?
ஆலகால விடத்தைக் கண்டத்தில் அடக்கிய
நீலக்கண்டனே
காலன் கைபடுமுன்னே காலஹர ரமணா, எனை நீ
விழுங்கிடாயோ?
காலஹர ரமணா, உனை பிலஹரியில் நான் பாட
காலம் தாழ்த்தாதருள் கூர்ந்து எனை நீ
விழுங்கிடாயோ?
(கலியினில்)



## 32. ஆனந்தம் எங்கே?

ராகம் : அம்ருதவர்ஷிணி தாளம் : ஆதி

### பல்லவி

ஆனந்தம் எங்கே என அலையும் மனமே கேளாய்
ஆனந்தமே நம் ஆன்ம ஸ்வரூபம்
(ஆனந்தமே ஸச்சிதானந்தமே; ஆனந்தமே ஹம்ஸாநந்தமே
ஆனந்தமே நித்தியானந்தமே; ஆனந்தமே சிவானந்தமே.
ஆனந்தமே ப்ரம்மானந்தமே; ஆனந்தமே பரமானந்தமே
ஆனந்தமே ரமணானந்தமே நம் ஆன்ம ஸ்வரூபம்)

### அனுபல்லவி

ஞானானந்த குரு ரமணன் அகத்தாமரை மீதமர்ந்து
''நான், நான்'' என ஒளிர்வது உணர்ந்த பின்னர் - நம்
வானாளெல்லாம் ஆனந்தமயமாம் பொன்நாளே
(ஆனந்தம்)

### சரணம்

நமனுக்கும் நமனன்றோ நம் அருணை ரமணன்
நமனும் அணுக அஞ்சுவனே ரமணர் இதயத்திருக்க,
நீ என்றும் மோனானந்த ரமணனைச் சிந்திப்பாய்
நீர்க்குமிழி வாழ்வை நிலையென நம்பாது மனமே,
நீடூழிவாழ ஆனந்தாம்ருதவர்ஷிணியில்
நீராடி உய்ந்து நிருமல பெருவாழ்வு பெறுவாயே
(ஆனந்தம்)

## 33. ஸர்வ ஸமரஸ போதகா

ராகம் : கமாஸ் தாளம் : ஆதி

### பல்லவி

ஸர்வ ஸமரஸ போதகா, ஸர்வஜீவ ஸம்ரக்ஷகா
ஸர்வ ஸாஸ்த்ரஸாரா, ஸர்வேசா ரமணா
ஸதா நின்னையே ஸ்மரிக்கும் வரம் நல்காய்.
(ஸர்வ)

### அனுபல்லவி

ஸ்வப்பன வாழ்வும், ஸ்தூல உடலும் சதமென உழலாது
(-ஸகியே)
ஸந்ததம் ரமணன் பதம் பணிந்தால் ஸஞ்சலம் இராதே-
(இதில்)
ஸந்தேஹம் இலையே, பரம ஸந்தோஷம் அடைவோம்
- நாளுமே.
(ஸர்வ)

### சரணம்

ஸர்வ ஸம்பன்ன ரமணன், ஸர்வ கல்யாண குணசீலன்
ஸதானந்தன், சரணாகத வத்ஸலன் நமைக்கைவிடாரே.
ஸத்சித் ஸ்வரூபமாய் இதய குஹையினின்று
ஸ்புரிப்பாரே ஸதா, ''அஹம், அஹம்'' என - ஸகியே
ஸ்கந்த ரமணனை அனவரதம் ஸ்மரித்தால் - சிவ
ஸாயுஜ்ஜியம் ஸித்திக்க, ஸுகஸாகரத்தில்
ஸுகிர்ப்போமே.
(ஸர்வ)

# 34. அருட்பெரும் ஜோதி

ராகமாலிகை அடதாளம் (14 அக்ஷரம்)

பல்லவி

அடாணா

*அண்ட பிண்ட சராசரமனைத்தையும் ஒளிர்விக்கும்*
*ப்ரம்மாண்ட ஜோதியே*
*தண்டனிட்டேன் ஆண்டருள்வாய் வேங்கட ரமண*
*அருட்பெரும் ஜோதியே*
*(அண்ட பிண்ட)*

அனுபல்லவி

*மண்டலமும், விண்டலமும் தேடி அயர்ந்திட்ட மாலும்*
*அயனுமே*
*காண்டறிய இயலா ஞான சிவக்கொழுந்தே,*
*ஜோதிப்பிழம்பே*
*சண்டமாருதமும் விண்டசைக்கவொணா அருணகிரீச*
*பரமாத்மா*
*மண்டுகமாமெனையும் ஓர் பொருட்டாய்க்கொண்டு*
*உன்னருள் என்மேல் சொரியாயோ?*
*(அண்ட பிண்ட)*

சரணங்கள்

1) காப்பி

*மண்ணிலவதரிக்கும்போது சுழியற்மங்கைக்குக் கண்*
*கொடுத்தருளிய குணாளா*
*மண்ணிலுனைப்போற்ற, மன்னர், பண்ணவர், பாமரர்*
*அண்டினர் அண்ணாமலைக்கு*

மண்ணில் ஞானஒளி பரவ ஐம்பத்து நான்காண்டு
அருணையில் அரசு செலுத்திய அரசே
மண்விட்டு விண் ஏகும்போது ஜோதி உருவில்
அருணை ஜோதியில் கலந்த ஆண்டவா
(அண்ட பிண்ட)

2) கானடா

மண்ணில் முகவைக்கண்ண முருகனையொரு
கார்த்திகைத்திருநாள் ஆண்டுகொண்ட அண்ணலே
மண்ணிலுனை நான் மானிட உருவில் தரிசித்ததால்
எனையும் உய்யக் கொள்ளாயோ?
மண்ணிலுளோர் ''பெண்ணென்றால் பேயும் இரங்கும்''
என்பர்; நீ இரங்காதிருத்தல் முறையோ?
மண்ணெல்லாம் பொன்மயமாய் ஒளிர்ந்திடும்
தீபத்திருநாள் நான் உனைவேண்டித் துதித்து
(தண்டனிட்டேன், ஆண்டருள்வாய் வேங்கட ரமண
அருட்பெரும் ஜோதியே)



# 35. தேவே ரமணா

ராகம் : ஸாவேரி தாளம் : ஆதி

### பல்லவி

*தேவே ரமணா, உனைத் தரிசித்தப்பின் மறு பிறவி வருமோ?*
*தேவதாமூர்த்தி, தலம், தீர்த்தம் அனைத்தும்*
*உனக்கிணையாகுமோ?*
*(தேவே)*

### அனுபல்லவி

*நாவால் உன் நாமம் உச்சரிக்க வொணாதுனைஅண்டிய*
*நாய், பசு ஸகலமும் வீடு பேறடைந்தனவே*
*(தேவே)*

### சரணம்

*1) காவேரியில் நீராடினும் கைமேல் பலன்*
*கிடைத்திடுமோ?*
*சா வேரினை அறுத்த ஸ்ரீ ரமணேசன் சரணத்தீர்த்தத்தில்*
*- தன்னை*
*நிவேதித்து, துதித்து, நீராட மூவினை உடன் அறுமே*
*சாவே சாக, சாசுவத சுகம் சார ஜன்ம சாபல்யமாகுமே.*
*(தேவே)*

2) தேவேந்திரனும், மாலும், அயனும் அளவிட முடியா
உன்னை
பாவேந்தரெனில் பக்தி பரவஸமாய்ப் பாடிப்பெறுவரே
தவமோ, யோகமோ, யாகமோ, தியானமோ அறியா
நான் - நின்
திவ்யத் திருவடியை இறுகுறப்பிடித்தேன்
அடைக்கலம் தந்தருளே
(தேவே)



# 36. மானிலத்தில் வாழும்

ராகம் : குந்தலவராளி
ஸ்ருதி : மத்யமம்

தாளம் : ஏகம். *(1+3)*

(நாடோடிப் பாடல்)

### பல்லவி

*மானிலத்தில் வாழும் மார்கம் வாழ்ந்து காட்டியுள்ளாரே*
*ரமணர் வாழ்ந்து காட்டியுள்ளாரே...*
*மானிட வாழ்வைப் பாழாக்கி*
*மீண்டும் பிறவிச் சுழலில் வீழாதே - தம்பி*
*மீண்டும் மீண்டும் பிறவிச் சுழலில் மூழ்காதே*
*(மானிலத்தில்)*

### அனுபல்லவி

*மனித தேஹம் மெய்யென்று நம்பிமோசம் போகாதே*
*மாய அகந்தை ஆட்டி மயக்கும் பஞ்ச பூத பொம்மை*
*இது - தம்பி*
*பஞ்ச பூத பொம்மையிது - தம்பி*
*(மானிலத்தில்)*

### சரணம்

*1) வாதாடி வம்பளந்து, வயிராற உண்டுடுத்தி*
*வீநாளெல்லாம் வீண் நாள் ஆக்காதே - தம்பி (2)*
*வானோரும் அறியவொணா விண்ணருணை ரமணன்*
*வார்க்கழல் வாழ்த்தி உய்ந்திடுவாய் - தம்பி (2)*
*(மானிலத்தில்)*

2) மொழிக்கெல்லாம் ஆதி மொழி மோனத்தை நாடு
மாதேவன் ரமணன் மொழியாது மொழிந்த மொழி
மோனமன்றோ - தம்பி (2)
மாய உலகில் சிக்கி, மண், பொன், புகழென
மாய்ந்து போகாதே - தம்பி (2)
மாரமணன் மலர் அடி தினம் பணிந்து
மாயையொழிந்து தன்னை அறிந்து
இன்புறுவாய் - தம்பி (2)
(மானிலத்தில்)



# 37. தேசகால அதீதன்

ராகம் : தேஷ் | தாளம் : ~~ஆதி~~

### பல்லவி

*ஸ்ரீசாம்ப ஸதா சிவ ரமணா -*
*தேசகால அதீதா-ஸ்ரீரமணா - நின்*
*செந்தாமரை சீர் சேவடி சரணம் சரணம் (ஸ்ரீ)*

### அனுபல்லவி

*சாமகானப் பிரிய ரமணா, சாந்தம் எங்கும் நிலவ அருளாய்*
*ஸமரஸ ஸத்போத ரமணா, ஸ்வயரூபம் விளங்க*
*அருளாய் (ஸ்ரீ)*

### சரணம்

*ஸ்ருதி ஸ்வர லய, ஸங்கீத ஸ்வரூபா*
*சுத்த ஸத்வ ஸஹஜ ஸமாதி ஸ்திதப்ரஞ்யா*
*சித்தம் ~~செழிக்க~~ சீலமனைத்தும் சிந்தையில் செறிந்திட*
*''சிவாய நம ஓம்'' என ஸதா ஸ்மரிக்க வரமருள் (ஸ்ரீ)*



# 38. பசுபதிரமணா

ராகம் : தர்பாரி கானடா தாளம் : ஆதி

### பல்லவி

பசும் புல் தேடப்போய் முட்புதரில் சிக்கிய இப் பேதைக்கு
பசும்புல் ஈதென அருட்பாலித்து பசியினைப்
போக்காயோ?
(ரமணா)

### அனுபல்லவி

பாலைவனத்தில் நீர்பருக ஓடோடி அலைகிறேன்
(ரமணா) - நின்னருள்
பாலூட்டி, ஞானபோதம் புகட்டி, பசு பாசம்
களைந்தாட் கொள்ளாயோ?
(பசும்புல்)

### சரணம்

பசுக்களைக் காக்கும் பசுபதிரமண அண்ணலே - பேர்
ஆசைப்பற்றி பாரெங்கும் பாய்ந்தோடும் இப்பொல்லா
பசுவினைப்பரிவுடன் பிடித்தணைத்து (ரமணா) உன்றன்
அருட் கயிற்றாலீர்த்து பேரானந்த வீடு சேர்க்காயோ?
(பசும்புல்)



## 39. தந்தையும் நீயே; தாயும் நீயே

ராகம் : வராளி தாளம் : ஆதி

### பல்லவி

*தந்தையும் நீயே தயவோடெனைக் காக்கும் தாயும் நீயே*
*தொந்த பந்தம் யாவும் நீயே, தேவாதிதேவ ரமணா*
*(தந்தையும் நீயே)*

### அனுபல்லவி

*தந்தருள் அபயம் தயாநிதே, நின்சேய் எந்தனுக்கு*
*தஞ்சமென வந்தடைந்தேன், நின்தாள் தொழுதேத்தியே*
*(தந்தையும் நீயே)*

### சரணம்

*தன்னலம் கருதி தனதெனப்பறைசாற்றி வாழ்ந்ததெலாம்*
*போதாதோ*
*நின்னயே முற்றும் பற்றிய எனைத்தள்ளிட லாகாதய்யா*
*உன் ஞான பரிதி முன் பனியென என் பாழ்வினை*
*விலகாதோ?*
*என் மாசெலாம் பொசுங்க, சுய ரூபம் துலங்க, எனை*
*ஆட்க்கொள்வாயே - (ரமணா)*
*(தந்தையும் நீயே)*





# 40. இருந்தபடியே இருப்பேன்

ராகம் : திலங்கு　　　　　　　　　　　　தாளம் : ஆதி

## பல்லவி

நீ அமைத்த இந்திர ஜால உலக அரங்கிலே - இன்று
நீ ஆட்ட ஆடும் பாவையே நான் எனும் ஆனந்தமோ?
ரமணா - உந்தனுக்கு ஆனந்தமோ (2)

## அனுபல்லவி

நீ சமைத்த சுவைமிகு எந்தன் அகந்தையை
நீ சுவைத்திட மறுத்தல் எனதாட்டம் ஒயலாகா-
தென்றன்றோ?
*(நீ அமைத்த)*

## சரணம்

நீ எத்தனைகாலம் கடத்தினும் இறுதியில் ஓர் நாள்
நீ எந்தனகந்தையை உண்டிடுவாய்; இது திண்ணம்
நீ எனை ஆட்டிய ஆட்டமும் ஒய்ந்திடுமே (அன்று) -
பின்னர்
''நீ என் செயின் எனக்கென்'' என இருந்தபடியே
இருப்பேன் நான்
*(நீ அமைத்த)*





# 41. தாலாட்டு

ராகம் : நீலாம்பரி தாளம் : ரூபகம்

### பல்லவி

*நீல மயில் வாகனனே நல் அருணேசன் தந்த குஹேசனே*
*நீலாம்பரியில் நீ தாலாட்ட, ஞானத்துயிலில் நான்*
*அமிழேனோ?*
*(நீல மயில்)*

### அனுபல்லவி

நீலகண்டன் மைந்தனே, நின் அடியர்தம் அஞ்ஞானம்
அழிப்போனே
நீலவண்ணன் மருகோனே, வேல் விழியால் என்
வல்வினை வீழ்த்திடாயோ?
(நீல மயில்)

### சரணம்

நீலக்கடலென அலை அலையாய் மோதுதே எண்ணங்கள்
மனத்தே
நீலவானிலும் இராதே எந்நாளும் விண்மீன்கள்
அத்துணை
நீல நஞ்சுள்ளம் கொண்ட நீள்நாள் நீசனேனாயினும்
நீல கார்முகில் ரமணா, நீ கருணை மழை பொழியாயோ?
(நீல மயில்)





# 42. மனித குலம் தழைக்க

ராகம் : செஞ்சுருட்டி  தாளம் : ஆதி (2 களை)
ஸ்ருதி : மத்யமம்

பல்லவி

மனித குலம் தழைக்க மண்ணில் மனித தேஹம் எடுத்த
தேவா - நின்
புனிதக்கழல் பணிந்தேன், இனி பிறவிச் சுழல் சூழாதிருக்க
அருளாய்
(மனித குலம்)

அனுபல்லவி

ஜனித்த இப்பிறவி நற்பயன் - ரமணா உனை தரிசித்தேன் -நீ
பணித்திடவே நின் பொற்பாதம் புகலென அருணை
அடைந்தேன்
(மனித குலம்)

சரணம்

மரண பயம் மிக்குள்ள அம்மக்கட்கு உறுஅரண் உன்றன்
சரணேயன்றி வேறொன்றும் உளதோ இப்புவியில்
தரணிதனில் ''தேகமே நான்'' என்றெண்ணித் தவிக்கும்
என்றனை
அரணமெனக்காத் தபயம் தந்து, மெய்யுணர்வு துலங்க
அருளாய்
(மனித குலம்)





## 43. பேரழகு

ராகம் : ஆரபி தாளம் : ஆதி

### பல்லவி

தந்தையும் அழகு, தாயும் அழகு, நீயும் அழகு
சுந்தரர் அழகம்மை தந்த அழகன் நீ ரமணா
(தந்தையும்)

### அனுபல்லவி

தொந்தமறுத்த ரமணா தங்கக்கையன் அன்றோ நீ
பந்த பாசமறுத்த ரமணா, பொன்னார் மேனியன் நீ
(தந்தையும்)

### சரணம்

1) உந்தன் நாமம் அழகு, உந்தன் உருவம் அழகு
உந்தன் உளம் அழகு, உந்தன் உபதேசம் அழகு
உந்தன் அதிசீல வாழ்வு உலகுக்கோர் விந்தை
உந்தன் தமிழ் சந்ததீம்பாக்கள் தேனினும் இனிமை
(தந்தையும்)

2) பூரண ஞானி ஆயினும் நீ ஞான நெறியுடன்
கர்மம், யோகம், பக்தியும் அழகுற போதித்தனையே
நிர்வாணப்பொழுதில் அருணை ஜோதியில் கலந்து
ஓர் பேரற்புதம் நிகழ்த்தினை, பரிபூர்ண ரமணா
(உன் ஒரு பெயர் பேர் அழகு ; மறு பெயர்
பரிபூரணமே)
(தந்தையும்)



# 44. ஸ்ரீ ரமண பரமஹம்ஸா

ராகம் : ஹம்ஸாநந்தி தாளம் : ஆதி

பல்லவி

ஸ்ரீரமண பரமஹம்ஸா - நந்தி வாஹனா
பரசிவவடிவா - திருவருணை வாஸா
(ஸ்ரீரமண)

அனுபல்லவி

அரணம் என ரமணா நின் சரணம் பற்றினேன்
மரணபயமகல நின் அபயகரம் அருள்வாய்
(ஸ்ரீரமண)

சரணம்

வருணனினும் மிகக் கருணை மழை பொழியும் கண்ணா
தருணமிதே வரும் வாதனை அகற்றி கண் பாராய்
பொருவிலா ஞான பரிபூரண ரமண குரு தேவா
அருள் புரிந்து, கூற்றனை உதைத்து அழிவிலாநிலை
நல்குவாய்
(ஸ்ரீரமண)





## 45. உந்தன் ஆசி

ராகம் : தன்யாசி

தாளம் : ஆதி

### பல்லவி

உந்தன் ஆசிதனை யாசிக்க, உந்தன் சந்நிதி அடைந்தேனே
உந்தன் பாதம் பரவிடும் என்னை, உதாசீனம் செய்தல்
முறையோ?
உந்தன் உதாரகுணம் தனக்கு, இது தகுமோ - ரமணா
எந்தனை சொந்தமென ஆண்டுகொண்டு, தன்யா -
ஆசி நல்காய்
(உந்தன்)

### அனுபல்லவி

எந்தன் ஐம்பூத ஆக்கையே சதமென நம்பி
உழல்வேனுக்கு
உந்தன் அபயகரமருளி உணர்த்தாயோ மெய்நிலைதனை
(உந்தன்)

### சரணம்

எந்தன் உள்ளம் செந்தழலிலிட்ட மெழுகென உருகுதே - பந்த
தொந்தமென வாழ்நாளெல்லாம் உந்தனை மறந்து,
பயிருக்கென
ஈந்த நீரனைத்தும் விழலுக்கே பாய்ந்ததென
ஏங்குவேனை
எந்தை ரமணா உந்தன் காந்தக் கண்ணால் காத்தருள்வாயே
(உந்தன்)



## 46. ஆண்டுகொள் என்னையும்

ராகம் : ரீதிகௌளை                    தாளம் : ஆதி

### பல்லவி

*அண்ணாமலை பரஞ்ஜோதியப்பா உன்னையன்றி வேறு
எண்ணாமல் நின்னையே எண்ணி பேரானந்தம் எய்த
அருளாய்
(அண்ணாமலை)*

### அனுபல்லவி

*அண்ணலே உன்னைப் பண்ணால் பாடும் திறம் அறியேன்
விண்ணவரும் போற்றும் குரு மணியே உன்னைத்
தொழும் முறையும் அறியேன்
(அண்ணாமலை)*

### சரணம்

*மண்ணில் உன் திருமேனி கண்டதன்றி வேறொன்றும்
அறியேன் - உன்
கண்ணால் எனைக்கடைக்கணித்து என் பொல்லா
வினை போக்கிடாயோ?
தண்ணீரில் கரைந்த உப்பெனவே உன்னில் என்னைக்
கரைத்திடாயோ?
தண்ணளிசேர் ரமணா, ஆண்டுகொள் என்னையும்
ஓர் பொருட்டெனக் கொண்டே
(அண்ணாமலை)*





## 47. பராசரக்குல விளக்கே

ராகம் : பைரவி　　　　　　　　　　தாளம் : ஆதி *(2 களை)*

### பல்லவி

*பராசக்தி பைரவிவடிவான அழகம்மைத்தாயவள்*
*பாரோர் உய்யப்பெற்றெடுத்த ஞானப் பெருங்கனலே -*
*ரமண அழகனே*
*(பராசக்தி)*

### அனுபல்லவி

*பராசரக்குலவிளக்கே, பாராயோ எந்தன் பாங்கதனை*
*பராமுகம் சரியோ, உந்தன் புகழுக்கிது பொருந்துமோ?*
*பரிபூரணனே உந்தன் பெருமைதான் குறைந்திடுமோ?*
*பரிதி முன் பனிபோல் எந்தன் பாசவினை பறந்திடாதோ?*
*(பராசக்தி)*

### சரணம்

*பாராதி அண்டம் பணிந்தேத்தும் தெய்வமே, எந்தன்*
*பாக்கியமன்றோ*
*பரமபாவன ரமணாநின் பொன்மேனி தரிசிக்கும் பேறு*
*பெற்றேனே*
*பரமதயாளா, இப்பேதையேனை பாதுகாத்தல் உன்*
*பொருப்பன்றோ?*
*பரசிவஉருவே, என் மனப்பேய் புசித்து, பரானுபவம்*
*புகட்டாயோ?*
*(பராசக்தி)*



# 48. காலகாலன்

ராகம் : பந்துவராளி தாளம் : ஆதி

### பல்லவி

இகத்திற்கும் பரத்திற்கும் உறுதுணை அருணை
ரமணனிருக்க
ஜகமாமாயையில் மயங்கி அவனை மறந்துலகில்
உழலுதல் ஏனோ?
(இகத்திற்கும்)

### அனுபல்லவி

பகவான் ரமணர் கைவிடாரே, அவன் பாதம் நம்பினோரை
விகடங்கள் பேசி, கபட நாடகம் ஆடி, வாழ்வை
விரயமாக்கலாமோ?
(இகத்திற்கும்)

### சரணம்

கால்கடுக்கக் கானலில் நடப்பரோ, கானல் நீரை நம்பி
காலடியில் சுவைக்க நற்கரும்பிருக்க இரும்பைத் தேடிப்
போவரோ?
காலமும் காலனும் ஒருக்காலும் காத்திராரே நமக்காக
காலம் தாழ்த்தாது காலகாலன் ரமணனைச்
சரண்புகுவோமே
(இகத்திற்கும்)



## 49. சாயுஜ்ய நிலை அருள்வாயே

ராகம் : ரஞ்சனி                                        தாளம் : ஆதி

### பல்லவி

கஞ்சனும் மாலும் தேடி அயர்ந்திட்ட நின் கஞ்சத்தாளே
தஞ்சமென துதித்து இரைஞ்சும் எந்தனுக்கு ''அஞ்சேல்'' என
செஞ்சொல்லருளி களிநடம் புரிவாயே - எந்தன்
நெஞ்சக்கமலத்துறை நிரஞ்சனானந்த ரமணா
(கஞ்சனும்)

### அனுபல்லவி

பஞ்சென எண்ணங்கள் பறந்து சூழுதே எந்தன்
மனதிலே
பஞ்சமிலையே, வஞ்சகத்துக் காலயம் எந்தன்
பாழ்மனமே - கல்
நெஞ்சனாயினும், கொஞ்சமிரங்கி எந்தன் மனவெஞ்சமர்
எஞ்சிடாது பேய் மனஞ்சிதைத்து தஞ்சமருளி
ஆட்கொள்ளுவாயே
(கஞ்சனும்)

### சரணம்

நஞ்சும் அமுதென கண்டத்தில் அடக்கியவா - நினை
நினைந்து
நெஞ்சம் நைந்து நைந்துருகி கெஞ்சும் எந்தனுக்கு -
ரமணா
அஞ்சா நெஞ்சம் தனை அருளி நின்கழல் துணையென

எஞ்ஞான்றும் காத்தருளி ப்ரஞ்ஞானம்தனை ஈவாய் -
ரமணா
அஞ்சலி செய்தேன் ஆயிரம் முறை உந்தனுக்கு -
அழகம்மை
ரஞ்சனிமைந்த ரமணா; சாயுஜ்ய நிலை அருள்வாயே
(கஞ்சனும்)



# 50. எள்ளுள்ளே எண்ணெய்

ராகம் : கானடா　　　　　　　　　　　　தாளம் : ஆதி

### பல்லவி

எள்ளுள்ளே எண்ணெயென என்னுள்ளே நீ இருக்க
எள்ளளவும் இன்னல் என்னை அணுகுமோ?

- ஸ்ரீ ரமணா

(எள்ளுள்ளே)

### அனுபல்லவி

விள்ள வெட்கும் எந்தன் கள்ள நெஞ்சம் கலங்குதே
எள்ளி நகைக்காது அள்ளி உந்தன் அருள் சுரக்காயோ?

(எள்ளுள்ளே)

### சரணம்

வெள்ளி கதிர் முன் இளம்பனியென என் துயர்
விலகாதோ?
கிள்ளிக்களைந்திடுவாய் கூர்விழியால் எந்தன் நோய்தனை
புள்ளிமானென எந்தன் உள்ளம் உந்தன் அருள்
பிணைப்பிலே
துள்ளிக் குதிக்குதே; எந்தன் மருள் நீக்கி மெய்ப்
பொருள் விளக்காயோ?

(எள்ளுள்ளே)



## 51. மனமோஹன குரு ரமணா

ராகம் : மோஹனம் தாளம் : ஆதி

### பல்லவி

மந்தஹாஸ வதனா மன மோஹன குரு ரமணா
மந்தமாருதமென வீசிடுவாய் அந்தமில் பேரின்பதனை
(மந்தஹாஸ)

### அனுபல்லவி

வந்தருள் தந்தருள் உர நெஞ்சதனை வீர தீர ரமணா
முந்தை வினை மாய்ந்திடவே வந்தநோய்தனை நீக்கிடவே
(மந்தஹாஸ)

### சரணம்

வெந்தழலிடு மெழுகென உருகிடும் எந்தன் உள்ளம்
உந்தனருள் வேண்டி உனைதினம் செந்தமிழிலிசைக்க
''கந்தா ரமணா எனைக்கா'' எனக் கதறும் உந்தன்
சேய்தனை
உந்தன் வஜ்ர வேலால் காத்தருள்வாய் கருணை விழி
ரமணா
(மந்தஹாஸ)





# 52. திரு அருணை சாரல்

ராகம் : நவ்ரோஸ் தாளம் : ஆதி

### பல்லவி

*திரு அருணை சாரலில் அமர்ந்திருக்கிறார்*
*ஸ்ரீ ரமணேஸ்வரர்*
*பெரும் கருணையுடன் அழைக்கிறாரே நம்மை*
*''நாம் யார்'' என்றறிய*
*(திரு அருணை)*

### அனுபல்லவி

*தருணமிதே காலம் தாழ்த்தாது விரைந்திடுவோம் அவர்*
*சந்நிதிக்கே*
*குருவருள் கூடுமே நம் சொரூபானந்தத்தில் சொக்கிடவே*
*(திரு அருணை)*

### சரணம்

*பொருள் பட்டம் பதவி புகழ்தேடி உலகில் உழன்றது*
*போதாதோ?*
*மருள் நீக்கி அருட்சீரளித்து நமை மீட்டிடுவாரே*
*நம் குருபரன்*
*நீருள் கரைத்த சருக்கரை உருவெனக் கரைந்திடுமே*
*நம் மனம்*
*இருள் கரைய பேரொளிப் பெற்றுய்ய ரமண அமுதம்*
*பருகிடுவோம் வாரீர்*
*(திரு அருணை)*



## 53. இயம்ப இயலுமோ?

ராகம் : சாமா  தாளம் : ரூபகம்

பல்லவி

இயம்ப இயலுமோ இறை ரமணா உந்தன்
இன்னருள் தனை
ஐயமும் அச்சமும் அகல அல்லல் யாவும் விலகிய
விந்தையினை
(இயம்ப)

அனுபல்லவி

ஐங்கரத்தான் ஆனை முகத்தான் தம்பியவன்
ஞானஸ்கந்தன்
எந்தனைக் காத்திடும் அருணேசன் தந்த ரமணேசன்
கருணையை
(இயம்ப)

சரணம்

நோயினால் நலிந்தேன் நொய்ந்தேன்; தேஹமே
நானென மனம் குலைந்தேனே
கோயிற்பிம்பம் தானே கோபுரம் தாங்குவதென்
-றெண்ணிடுமாப்போல
ஆருயிராம் உனைமறந்து ஆணவச் செருக்கால்
துயர் சுமந்தேனே
நாயினும் கடையனென் மாமயக்கழித்து
ஆனந்தத்தழுத்தி எனை ஆண்டத்திறம்
(இயம்ப)

# 54. நெஞ்சமே அஞ்சிடாதே

ராகம் : ஸ்ரீரஞ்சனி　　　　　　　　　　தாளம் : ஆதி

### பல்லவி

நெஞ்சமே கொஞ்சமும் நீ அஞ்சிடாதே - ரமணேசன்
கஞ்சமலர் அடியில் தஞ்சமுண்டு நமக்கே
(நெஞ்சமே)

### அனுபல்லவி

நெஞ்சம் நெகிழ ஸ்ரீரஞ்சனியில் மனோரஞ்சித
ரமணன் புகழ்பாட
பஞ்செனப் பறந்திடுமே சஞ்சித முதல் மூவினையும்
வேரோடே
(நெஞ்சமே)

### சரணம்

நஞ்சும் அமுதென அருந்தியவன் நல் அருணை ரமணேசன்
தஞ்சமென அவன் சரண் கெஞ்சி அஞ்ஞானமகல
இறைஞ்சிடின்
வஞ்சனேன் வன்நெஞ்சிலும் வாஞ்சையுடன்
வந்தமர்வானே
அஞ்சேலென அபயகரமருளி காத்திடுவான்:
நமைக்கடைத்தேற்றிடுவானே
(நெஞ்சமே)



# 55. சிவரமண கவசம்

ராகம் : சௌராஷ்ட்ரம் தாளம் : ஆதி

### பல்லவி

நவக்ரஹமும் நாளும் நேரமும் எனை என் செயும்?
(ரமணா)
-உந்தன்
அனுக்ரஹ அரவணைப்பின் ஆனந்தத்தில்
அமிழ்ந்திருக்கையிலே
(நவக்ரஹமும்)

### சரணங்கள்

1) நவநவ லீலைகள் நிதம் நிதம் புரிந்தெனைக்
காத்தருளும் ரமணா
தவயோகியரும் வியக்க எந்தன் அல்லல் யாவும்
களைந்த ரமணா
(நவக்ரஹமும்)

2) சிவரமண அனுபூதி கவசம் என்றும் எனை ரக்ஷித்தருள
பவநோய் வல்வினை நமவாதனையும் எனை
அணுகுமோ?
(நவக்ரஹமும்)

3) நாவால் ஸதா ''நமோ ரமணாய, ஓம் நமோ ரமணாய''
என ஓதி
அவனடியே சரணடைவோர் அடைவரே
ஆத்மானுபவம்
(நவக்ரஹமும்)



## 56. பாராதி அண்டமெலாம்

ராகம் : சிந்துபைரவி தாளம் : ஆதி

### பல்லவி

பாராதி அண்டமெலாம் பரிபாலிக்கும் பரமா எந்தன்
முகம்
பார்த்தொருக்கால் போக்கிடாயோ எந்தன் நெஞ்சத்து
பாரந்தனை?
*(பாராதி)*

### அனுபல்லவி

தீராத தீவினையும் தீவிழியால் தீய்த்திடும் தேவாதி
தேவனே
தீயனேனும், தீனனென் துயர் தீர்த்திடுவாய்
தீனதயாளனே
*(பாராதி)*

### சரணம்

வாராய் வாராய் ரமணா, வந்தமர்வாய் எந்தன்
நெஞ்ச ஊஞ்சலிலே
பாரோர் வியக்க பஞ்சாய் பறந்திடுமே எந்தன்
நெஞ்ச பாரமெல்லாம்
பாவால் உன் புகழ் பாட பரிவாய் வந்திடுவாய்
நீ விரைந்தே
வாராதிருத்தல் தகாதய்யா; வந்தென் நெஞ்சத்தே
தங்கிடுவாய் ஐயா
*(பாராதி)*



## 57. எந்தன் பாக்யம் -ஸ்ரீ ரமணா

ராகம் : பாக்ய ஸ்ரீ தாளம் : ஆதி

பல்லவி

எந்தன் இதய அரங்கில் நடனமிடும் ரமண தேவே
எந்தனை நீ ஆட்கொள்ளும் தந்திரம் தான் என்ன
விந்தையே!
(எந்தன்)

அனுபல்லவி

வேதமோ தியானமோ வேள்வியோ தவமோ
அறியா இப்பேதையை
வேதனைத் தீயிலிட்டுப் புடமிட்டுப் பொன்னாக்கல்
எந்தன் பாக்யம் - ஸ்ரீ ரமணா
(எந்தன்)

சரணம்

உந்தன் அருளை என்னென்றுரைப்பேன் - ஸ்ரீ ரமணா
எந்தன் தாளாத்துன்பெல்லாம் தூசாய்ப் பறந்தோட
பந்ததொந்தம் தொலைந்து உந்தன் பதமேயடைய - நீ
தந்த அருட் பிரசாதமே இது- இந்த அபலைக்கு
(எந்தன்)





## 58. ''நான், யான்''

ராகம் : தர்பாரி கானடா

தாளம் : ஆதி

### பல்லவி

''நான், யான்'' என மார் தட்டி இறுமாந்திடும்
மனிதா - அந்த
''நான் யார்'' என அறிய முயன்றாயா?
(''நான், யான்'')

### அனுபல்லவி

''நான்'' என்பதெது என்றாராய, அங்கே
நானேதும் இராதே!
''நான்'' என்றொன்றில்லையே; அது மாயப்பொய்
அகந்தையே.
(''நான், யான்'')

### சரணம்

நாம் நினைத்தால் மட்டும் நடந்திடுமோ ஏதுமே?
நம்முள்ளே தானாய் ஒளிரும் நம்பன் அருளின்றி
நமதுள்ளும் புறமும் உயிரோடுயிராய் ஒன்றி
நம்மைப் படைத்து நடத்தி ஆட்கொள்பவன்
ஞான ரமணேசனன்றோ?
(''நான், யான்'')





# 59. அமரரும், தேவரும்

ராகம் : பேகடா                                                  தாளம் : ஆதி

## பல்லவி

அமரரும் தேவரும் அடிபணிந்து அனுதினமும் வணங்கும்
ரமணா, உனை எந்நேரமும் மறவா வரமருளாய்
(அமரரும்)

## அனுபல்லவி

கமலமுக கருணைபொழி காந்தக் கண்ணாளா
அமல வேங்கடரமணா, நிமல வாழ்வெனக்குத் தந்தருள்
(அமரரும்)

## சரணம்

எம்மதமும் போற்றும் ஸர்வ ஸமரஸ போதகனே
எம்மொழிக்கும் ஆதிமொழியாம் மோனோபதேசிகனே
அன்பே கடவுளென அவதரித்த அஹிம்ஸா மூர்த்தியே
இன்பே அருளுவாய் எமனை வென்றத்தாள் என்தலை
வைத்தே
(அமரரும்)





## 60. வாழ்க்கை நல் வாழ்க்கை

ராகம் : சிம்மேந்திரமத்யமம் தாளம் : ஆதி

### பல்லவி

*வாழ்க்கை நல் வாழ்க்கையாய் வாழ்ந்திட வேண்டிடில்*
*வேட்கையோடு ரமணர் வார்கழல் விழைந்து*
*சேவித்திடுமினே*
*(வாழ்க்கை)*

### அனுபல்லவி

*யாக்கையே மெய்யென மயக்க, வெஞ் சிறைவாய்ப்பட்டு*
*(மின்னனைய)*
*மீட்கையெனும் வழியறியாது தவித்திடும் உயிர்காள்*
*(வாழ்க்கை)*

### சரணம்

*ஆற்றிலே நீர் பெருக்கெடுத்து தெளிந்தோடினும், நாம்*
*முயன்றாலன்றி*
*அடுக்களைக்குடத்தில் தானே குடிநீர் நிரம்பிடுமோ?*
*அருணை ரமணேசன் அரும்பெரும் கருணைக்கடல்–*
*எனினுமவன்*
*அருட்பதம் அருச்சித்து அருள் இறைஞ்சும் கடமை*
*நமதன்றோ?*
*(வாழ்க்கை)*



# 61. சாதனை ஏதும்

ராகம் : பீலு தாளம் : ஆதி
ஸ்ருதி : மத்யமம்

### பல்லவி

சாதனை ஏதும் சிறிதும் புரிந்திலேன் எனினும்
சோதனை போதுமய்யா ஸ்ரீரமணா இனியும் தாளேனய்யா
(சாதனை)

### அனுபல்லவி

வேதனையும், வாதனையும் தந்து, வதைத்திடல்
வேண்டாமய்யா
பேதை உந்தன் சேயல்லவா? பேணுதல் உந்தன்
பொறுப்பல்லவா?
(சாதனை)

### சரணம்

தித்திக்கும் நின் திரு நாமம் நினைந்து
நினைந்துருகிலேன்
முத்திதரும் நின் திருவடி தலையாலே வணங்கிலேன்
எத்தனைப் பிறவியில் எத்துணை பிழைகள்
இழைத்திடினும் (நான்)
அத்தனையும் உந்தன் தீவிழியால் தீய்த்தருள்;
நின்கழல்பிடித்தேன் இத்தருணம்
(சாதனை)

# 62. நமனுக்கும் நமன்

ராகம் : யமுனா கல்யாணி தாளம் : ரூபகம்
ஸ்ருதி : மத்யமம்

1) நமனுக்கும் நமனன்றோ நம் ரமணர்
நம்மை நம்முள்ளே கொண்டு செல்வாரே
''நான்'' என்பதெது என நாடச்செய்வாரே
''நான்'' எதென்றறிந்தபின் நாடுதற்கு ஏதும் இராதே

2) ''நான், நான்'' என்றிதய குஹையுள் ஒளிர்வது
(எந்) நாளுமிருப்பது, என்றும் நாசமிலாததொன்று.
நானே பரமாத்மா என்றுணர்ந்த பின்னர்
நமனும் இரானே; உள்ளது ஒன்றே அதுவே

***''நான் நான்'' ஸ்புரணமே (2)***





## 63. எந்தன் இடர்கள்

ராகம் : யதுகுலகாம்போதி தாளம் : ஆதி

### பல்லவி

எந்தன் இடர்கள் முழுதும் எரிவீழும் பஞ்சென
உந்தன் அருளால் மாய்ந்திடாதா – ரமணா?
எந்தன் கர்மவினைப் பிணைகள் பிரிபடலாகாதா?
பந்ததொந்தம் ஒழிந்துன் பதமடையும் நாள் வாராதா?
(எந்தன்)

### அனுபல்லவி

ஐந்துவித பூதபேதத்தாலான அழியும் ஆக்கையைப்
பேணுதலே
போந்தநெறி என நினைந்து வாழ்ந்ததெலாம் போதாதா?
(எந்தன்)

### சரணங்கள்

1. இந்த உலகே ஓர் கனவு, கானல் நீர் ஒத்ததென
உணர்ந்தும்
இந்திர ஜாலமாயவாழ்வில் சிக்குண்டுழலுதல்
முறையோ?
மந்திரமோ தந்திரமோ சித்தியோ வேண்டேன்
உன்னருளொன்றே வேண்டி
தந்தேன் உடல்பொருள் ஆவியனைத்தும்
இத்தருணம் – உந்தனுக்கு
(எந்தன்)





2. புந்திமகிழ உண்டுடுத்துறங்கி காலமெலாம்
வீண்போக்கி
சிந்தையில் உனை இருத்தாது அங்குமிங்கும் திரிந்தது
விந்தையல்லவா?
எந்த நேரமும் நிழலென காலன் எனைத்தொடர,
தாமதியாது
வந்தெனை நீ உண்டிடுவாய் ரமணா, காலனெனைத்
தீண்டுமுன்னே.
(எந்தன்)



## 64. மறுவாழ்வு

ராகம் : ஹிந்தோளம் தாளம் : ஆதி

### பல்லவி

*மலரிடை தேன்பருகு வண்டெனஉன் கமலபத*
*மலரிலே அருள் அமுதுண்டு மகிழ்ந்திருந்திட*
*வேண்டுமய்யா (ரமணா)*
*(மலரிடை)*

### அனுபல்லவி

*மல மாசுகள் பல ஆசைகள் பழவாசங்கள் களைந்து — நிர்*
*மலமாக்கி, எனிதய குஹையுள்ளும் நீ ஒளிர்வதை*
*உணர்த்திடுவாய்*
*(மலரிடை)*

### சரணம்

*மலர் சோலை நிறை திரு அண்ணாமலை திகழ் ஜோதியே*
*மலரும் மணமும் மதியும் ஒளியுமென அருணமலை*
*கலந்த தேவே*
*மலர்விழியால் அடியர் மயலழித்து,*
*காமாதிக்கட்டவிழ்க்கும் ரமணா—நின்*
*மலர்த்தாளால் என் மாமயக்கம் மாய்த்து, நறுமண*
*மறுவாழ்வு மலர அருளாய்*
*(மலரிடை)*



# 65. குருவும், தெய்வமும்

ராகம் : கேதாரகௌளம் தாளம் : ஆதி

பல்லவி

குருவும் தெய்வமுமாகி எனைக்காத்தருளும் ரமண தேவா-
உன்
திருவடிப்புகழ் தினமும் பாடி துதிப்பதன்றி
வேறொன்றறியேனே
(குருவும்)

அனுபல்லவி

உருகி உளம் நெகிழ்ந்து, உனையே நினைந்து, நினைந்து
பெருகும் கண்ணீரில் உந்தன் திருவுருவம் அபிஷேகிக்க
வேணுமய்யா.
(குருவும்)

சரணம்

ஓர் பூச்சரத்திலே ஊடுருவிச் செல்லும் நூலெனவே
ஒருவனாம் உனை மனதில் பற்றி, கருமமனைத்தும்
புரிதல் வேண்டுமய்யா
உருவமும் அருவமும் அல்லை; ஆயினும் அருவுருவாய்
எங்கும் நிறைந்த
குரு ரமணா, என்னுள்ளே உனைக்கண்டு, உன்னிலே
நானொன்றிட அருளாய்.
(குருவும்)

# 66. அருணாசல சிவம்

ராகம் : ஸ்ரீராகம் தாளம் : ரூபகம்

### பல்லவி

ஸ்ரீ அருணாசல ஸ்தல மஹிமைதனையும்
ஸ்ரீ ரமணேசன் பெருமைதனையும் அறிந்திடத் தரமோ?
(ஸ்ரீ அருணாசல)

### அனுபல்லவி

ஸ்ரீ அருணகிரியே புவியின் இதயமாம்; அயனும்
ஸ்ரீ ஹரியும் அளக்கமாட்டா தேஜோமய
சுயம்புலிங்கமாம்

(மத்யம காலம்)

சதகோடி சித்தரும் சிவயோகியரும் ஞானியரும்
தேவரும் உலவிவரும் மலை
சக்திக்கொரு பாகம் ஈந்த மலை; நினைக்க முக்திதரும்
கருணார்ணவ மலையாம் - இந்த
(ஸ்ரீ அருணாசல)

### சரணம்

ஸ்ரீ அருணாசலசிவனே அழைக்க ஈரெட்டுவயதிலே
ஸ்ரீ மார்க்கண்டனெனவே யமனைவென்று, மதுரை
துறந்து

ஸ்ரீ அருணை சேர்ந்த வேங்கட ராமனே; ஸ்ரீ பகவான்
ரமணனே
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியெனவே திகழும் மோன
குருபரனே

**(மத்யம காலம்)**

திரு அருணை ஜோதியில் கலந்த தேவனே அருணாசல
சிவமே தானானவனே
திருவருள் புரிந்து சாயுஜ்ய நிலை நல்குவாய் எமக்கு;
அனந்தகோடி தண்டனிட்டேன் உமக்கு
(ஸ்ரீ அருணாசல)



# 67. ஸ்ரீ ரமணேஸ்வர மஹாலிங்கம்

ராகம் : கல்யாணி தாளம் : ஆதி

### பல்லவி

ஓம் ஸ்ரீ ரமணேஸ்வர மஹாலிங்கம்
அகில லோக குருஸ்வரூப மஹாலிங்கம்
ஸமஸ்த கல்யாண குண சோபித லிங்கம்
நமஸ்தே நமஸ்தே ஸதா நமஸ்தே நமஸ்தே
(ஓம் ஸ்ரீ)

### அனுபல்லவி

பவித்ர நேத்ர தீக்ஷேண, ஞான தாயகம்
ஸர்வத்ர ஜீவாத்மனே, மோக்ஷ ப்ரதாயகம்
(ஓம் ஸ்ரீ)

### சரணம்

ஸச்சிதானந்த ஸ்வரூபம்; ஸதா ஹ்ருத் கமலவாஸம்
ஸர்வ ஸ்ம்ருதி ஸார ப்ரவர்த்தகம்; சூர்ய கோடி ப்ரகாசம்
ஸர்வேஸம் ஏகம் அக்ஷரம்; ஸர்வமங்கள கடாக்ஷம்
ஸர்வ ஸாக்ஷி பூதம்; ஸர்வ ப்ரபஞ்ச ரக்ஷகம்
(அதி சுந்தர லிங்கம் ஸ்மராம்யஹம்
அதி சாந்த லிங்கம் ஸ்மராம்யஹம்
அதி சூக்ஷ்ம லிங்கம் ஸ்மராம்யஹம்
அதி அத்புத லிங்கம் ஸ்மராம்யஹம்
அதி சுந்தர லிங்கம், அதி சாந்த லிங்கம்
அதி சூக்ஷ்ம லிங்கம், அதி அத்புத லிங்கம்
ஸ்மராம்யஹம், ஸ்மராம்யஹம், ஸ்மராம்யஹம்)
(ஓம் ஸ்ரீ)

# 68. ஸாஷ்டாங்க நமஸ்காரம்

ராகம் : புன்னாகவராளி தாளம் : ரூபகம்
ஸ்ருதி : மத்யமம்

பல்லவி

*ஸ்ரீ ரமணேஸ்வர மஹாலிங்கமே*
*நமஸ்காரம் ஸாஷ்டாங்க நமஸ்காரமே*

சரணங்கள்

1) *ஆதி அருணாசல பரம் பொருளே*
*அந்தர்யாமியாய் என்னுள் ஒளிர்பவனே*
*(ஸ்ரீ ரமணேஸ்வர)*

2) *புண்ய ஸ்லோகனே பாபவிமோசகனே*
*கருணா ஸாகரனே நித்யானந்தனே*
*(ஸ்ரீ ரமணேஸ்வர)*

3) *பரிபூர்ண பரிசுத்த ஸதாசிவலிங்கமே*
*ஸமஸ்த கல்யாணகுண சுப லிங்கமே*
*(ஸ்ரீ ரமணேஸ்வர)*

4) *ஸூர்ய கோடி ப்ரகாசனே ஸர்வவேத ஸாரமே*
*ஸர்வாத்ம ஸ்வரூபனே ஹ்ருதயகுஹ வாஸனே*
*(ஸ்ரீ ரமணேஸ்வர)*

5) *ஸர்வ மங்கள மூர்த்தியே ஸர்வ லோக ரக்ஷகனே*
*தீபமங்கள ஜோதியே நாத ப்ரம்ம ரூபனே*
*(ஸ்ரீ ரமணேஸ்வர)*



ஸ்ரீ ரமணேஸ்வர மஹாலிங்கம், ஸ்ரீ ரமணாஸ்ரமம்

## 69. விண்புகழ் ஞானியான்

ராகம் : மத்யமாவதி தாளம் : ஆதி

### பல்லவி

மண் தழைக்க மனித குலம் ஓங்க அவதரித்தோன் -
ஸ்ரீரமணன்
தண்ணளி விழியான் மௌன மொழியான்
ஒண்சுடர் மேனியான் விண்புகழ் ஞானியான்
(மண் தழைக்க)

### அனுபல்லவி

மண்ணிலுள்ளோர் மகிழவே, மரணந்தனை வென்ற மாவீரா
– உனை
அண்டியர் தம் யமபயமகல அபயகரமருளிய மகேசா
(மண்தழைக்க)

### சரணம்

வண்தமிழ் மாமுனியென உலகோரனைவரும்
உன்னடி வணங்க
மண் மடந்தை உவந்தருளிய மங்கள சிவ ரமணா
கண்தீட்சை யருளிக்கடையேனையும் கைத்தூக்கிய ஆண்டவா
கண்பெற்ற பயன் உனைத் தரிசித்துப் பிறவிபேறு உற்றேனே
பண் மத்யமாவதியில் பாட்டிசைத்து மஹாலக்ஷ்மி
நானுனைத் துதிக்க
மண்ணோரும் விண்ணோரும் உந்தன் ஆசி பெற
விழைந்தனரே
(மண் தழைக்க)

# 70. ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

ராகம் : மாண்டு தாளம் : ஆதி

**ஓம்** எனும் ஓங்காரத்தின் ஒலியெனவே
ஒலிப்பவன்-ரமணன்
**ந**ம்முள்ளும் ''நான், நான்'' என்று நாளும்
ஒளிர்பவன்-ரமணன்
**மோ**னமே உருவான மோனானந்த குரு-ரமணன்
பக்தரை பரிபாலித்து
**ப**ந்த பாசம் போக்கிடும் பரமபாவனன்-ரமணன்
**க**ணபதி முனிக்குக் கந்தனெனவே காக்ஷிதந்தவன்-ரமணன்
**வ**ல்வினையழித்து நல்வாழ்வு அருளுபவன்-ரமணன்
**தே**ஜோமயமாய் திருவருணை ஜோதியில்
கலந்தவன்-ரமணன்
**ஸ்ரீ** ரமணேஸ்வர மஹாலிங்கமென கோயில்
கொண்டவன்-ரமணன்
**ர**த்ன சுருக்கமென ஞானமார்க்கம்தனை
போதித்தவன்-ரமணன்
**ம**னிதகுலம் தழைக்க மண்ணில் அவதரித்தவன்-ரமணன்
**ணா** எனும் எழுத்தை தன் நாமத்தின் மகுடமென
அணிந்தவன்-ரமணன்
**ய**மனை வென்ற தாளால் யதார்த்த நிலை நல்கும்
தயாளன்-ரமணன்



# 71. வாழ்த்து

ராகம் : யமுனா கல்யாணி
தாளம் : ஆதி
ஸ்ருதி : மத்தியமம்

*1)* வாழ்க அருணை ரமணன் நாமம் வாழ்க வாழ்கவே
வாழ்க அவன் நற்றாள்கள் வாழ்க வாழ்கவே
வாழ்க அவன் வண்தொண்டர் வாழ்க வாழ்கவே
வாழ்க அடியர் வாழையடி வாழையெனவே.

*2)* வாழ்க சிவானந்த வளம் வையம் முற்றும் கமழவே
வாழ்க அவனியாவும் ஆன்ம நேயம் சூழ்ந்து வாழ்கவே
வாழ்க பராசக்தி பரமாத்ம ஜோதி வாழ்கவே
வாழ்க ஆனந்தம் பொங்க, வாழ்வில் சாந்தி நிலவவே

எங்கும் சாந்தி நிலவவே, என்றும் சாந்தி நிலவவே
எங்கும் சாந்தி நிலவவே, என்றும் சாந்தி நிலவவே
ஓம் சாந்தி , சாந்தி, சாந்தி.





அண்ணாமலைச் சாரலிலே பாலி தீர்த்தமும்,
ஸ்ரீ ரமணாச்ரமமும்



அண்ணாமலையார் கோவிலும், ஊரும்:-
ஸ்கந்தாச்ரம காக்ஷி